

மயிலாப்பூர் சித்திரக்குளத் திருப்பணி தொடக்கவிழாவில் மாண்புமிகு அறநிலையத்துறை அமைச்சர் டாக்டர் மு. அம்மமுத்துப் பிள்ளை, எம்.பி.பி.எஸ்., எம்.எஸ்., அவர்கள் கலந்து கொண்டு சிறப்பித்தார்கள். மயிலை சட்டமன்ற உறுப்பினர் திரு வெ. பாலசுப்பிரமணியம் அவர்களும் இவ்விழாவில் கலந்து கொண்டு சிறப்பித்தார். இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை ஆணையாளர் திருமிகு ச. சாவர்க்கர் இ.ஆ.ப. முன்னிலையில் நடைபெற்ற இவ்விழாவில் இணை ஆணையாளர் திரு இரா. சுப்பிரமணியன் பி.ஏ. பி.எல். சென்னை துணை ஆணையாளர் திரு ப. ராஜா பி.எஸ்சி. பி. எல். ஆகியோர் கலந்து கொண்டு சிறப்பித்தார்சள்.



முகப்பு :
அருள்மிகு தேவி கருமாரியம்மன்

# திருக்கோயில்

இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை,
119, உத்தமர் காந்தி நெடுஞ்சாலை,
சென்னை—600 043,
தொலைபேசி எண்: 8279407

ஆசிரியர் :
கவிஞர் டாக்டர் **த. அமிர்தலிங்கம்,** M.A.,Ph.D.

| மாலை : | திருவள்ளுவர் ஆண்டு 2026 யுவ ஆண்டு கார்த்திகை-மார்கழி | மணி : |
|---|---|---|
| 37 | 1995 நவம்பர்-டிசம்பர் விலை ரூ. 6—00 | 11 & 12 |

## திருக்கோயில் வாசகர்களுக்கு அறிவிப்பு

அன்பு வாசகர்களே ! வணக்கம்,

திருக்கோயில் திங்கள் இதழின் உறுப்பினர்களாகச் சேர விருப்பம் உள்ளவர்கள்.

உயர்திரு **ஆணையர்** அவர்கள்
இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை
சென்னை-600 034.

என்ற முகவரிக்கு பணவிடை அல்லது வங்கி வரைவோலை மூலம் பணம் அனுப்பிச் சந்தாதாரராகச் சேர்ந்து கொள்ளலாம்.

### சந்தா விவரம்

| | | | |
|---|---|---|---|
| அரை ஆண்டு | .. | ரூ. | 18-00 |
| ஓர் ஆண்டு | .. | ரூ. | 36-00 |
| ஆயுள் | .. | ரூ. | 300-00 |

சந்தாதாரர்கள் முழுமுகவரியைத் தெரிவிக்க வேண்டும்,
முகவரியில் மாற்றம் இருப்பின் உடனுக்குடன் தெரிவித்திடவும் வேண்டும்.

## பொருளடக்கம்



இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை வெளியீடு

உ

# இறைவனின் இயலாமை

திருமிகு ச. சாவர்க்கர்., இ.ஆ.ப.,

ஆணையாளர்,

இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை,

சென்னை-34



எல்லாம் வல்லவர் இறைவனென்று கூறிடுவார்
எல்லையற்ற அன்பினன் என்றே புகழ்ந்திடுவார்
உன்னாலும் முடியாதது எத்தனையென்று
எண்ணிட்டேன்
என்னால் முடிந்ததை எண்ணிக் கூறுகிறேன். 1

சரணாகதனைத் தண்டித்தல் உன்னால்
முடியாது
முரணாகத் தண்டித்தால் மூவுலகும் வியக்கும்
சரண் செய்திட்டால் வரன்முறை செய்திடுவாய்
அரண் போன்று அபயம் அளித்திடுவாய். 2

உயிர்களை உண்டாக்க உன்னால் முடியாது
உயிர்களுக்கு உடல் மட்டுமே தந்திடுவாய்
உலகத்தைப் படைத்து உயிருக்குயிராய்
இருந்திடுவாய்
உலகத்தார் எல்லோரும் உய்விக்கச்
செய்திடுவாய். 3

பாவிகளுக்கு மோட்சமளிக்க உன்னால்
முடியாது
பவத்திறம் அறுப்பதற்குப் பாலமாக
இருந்திடுவாய்
படிப்படியாகப் பக்குவம் பெற்றிடச்
செய்திடுவாய்.
முடிவான பின்னரே முக்திப்பேறு
தந்திடுவாய் 4

முக்திக்குப்பின் பிறப்பளிக்க உன்னால்
முடியாது
முழுமுதலாய் இருந்தாலும் உன்னால்
முடியாது
முடியாதது இருந்தாலும் முழுமையானவன்
நீயே
முழுமையானவன் ஆதலால் சர்வசக்தன்
நீயே. 5





# திருவிற்குடி

புலவர் கண்ணபுர
பொன். சுப்பிரமணியன்

இத்திருத்தலம் சன்னாநல்லூர்-நன்னிலம் திருவாரூர் செல்லும் பேருந்து வழிக்கு அண்மையில் உள்ளது. கங்களாஞ்சேரியில் இறங்கி கிழக்கே 3 கி.மீ. தொலைவு தூரம் சென்றால் இத்திருத்தலத்தை அடையலாம். மயிலாடுதுறை—திருவாரூர் புகை வண்டித் தொடரில் விற்குடி புகைவண்டி நிலையத்திலிருந்து கிழக்கே 2 கி மீ தொலைவு சென்றாலும் இத்திருத்தலத்தை வழிபடலாம்.

அட்டவீரட்டத் தலங்களில் இத்திருத் தலம் இறைவன் சலந்தராசுரனைச் சம்கரித்த திருத்தலம். திருமால் பிருந்தையின் மேல் மையல் கொண்டு அவளைத் துளசியாக அடைந்த திருத்தலம்

இறைவன வீரச்செயல்களின் அற்புதம் வெளிப்பட்ட திருத்தலங்கள் எட்டு. அவற்றை அட்ட வீரட்டத் தலங்கள் என்பர் ஆன்றோர். அட்ட வீரட்டத் தலங்களைப் பின்வரும் திருப் பாடல் குறித்தருள்கிறது

''பூமன் [illegible]ரம்கண்டி அந்தகன் கோவல்புரம்
அதிகை
மாமன் [illegible]பறியல், சலந்தரன் விற்குடி மாவழுவூர்,
காமன் குறுக்கை, யமன்கடவூர் இந்த
காசினியில்
தேமன்னு கொன்றையும் திங்களும் சூடிதன்
சேவகமே''

என்பது அப்பாடல். இறைவன் பிரமனின் சிரம் கொய்த தலம் திருக்கண்டியூர். அந்தகாசுரனைக் கொன்ற தலம் திருக்கோவலூர். திரிபுரத்தை எரித்த தலம் திருவதிகை. தக்கனை வதைத்தலம் திருப்பறியல். சலந்தராசுரனைக் கொன்ற தலம். திருவிற்குடி யானையை உரித்த தலம் வழுவூர். மன்மதனை எரித்த தலம் திருகுறுக்கை. இயமனைஉதைத்த தலம் திருக்கடவூர்.

அப்பர் அடிகளும் இத்தலங்களைக் குறிப் பிட்டு அருளிச் செய்துள்ளார்.

காவிரியின் கரைக்கண்டி வீரட்டானம்
கடவூர் வீரட்டானம் காமருசீர் அதிகை
மேவியவீ ரட்டானம் வழுவை வீரட்டம்
வியல்பறியல் வீரட்டம் விடையூர்திக்
கிடமாம்
கோவல்நகர் வீரட்டம் குறுக்கை வீரட்டம்
கோத்திட்டைக் குடிவீரட்டானம் இவை
நாவில்நவின் றுறைப்பவர்க்கு நணுகச்
சென்றால்
நமன்தமரும் சிவன்தமர் என்று அகல்வர்
அன்றே''

என்பது அவர் பாடல். இதனுள் குடி என்று குறிப்பிடப்படுவது விற்குடியை யாம்.

**திருக்கோயிலமைப்பு**

கோயில்மேற் கோயில் உள்ளது. எதிரே சக்கர தீர்த்தம் உள்ளது. தீர்த்தங்கரையில் விநாயகர் கோயில் உள்ளது. ஐந்து நிலை கோபுரம் கோயிலுக்கு அணி செய்கிறது. இரண்டு பிரகாரங்கள் உள்ளன. வெளிப் பிரகாரத்தின் கீழ்வாயிலில் திருமாலுக்காகப் பெருமான் பிருந்தையைத் துளசியாக எழுப்பிய இடமும் திருமால் வழிபட்ட சிவாலயமும் உள்ளன. கோபுர வாயிலைக் கடந்து உள்ளே சென்றால் இடதுபுறத்தில் அம்மன் கோயில் உள்ளது. வலமாக வந்து விநாயகர்சன்னிதியை வழிபடுவோம்.

மேற்குப் பிரகாரத்தில் விநாயகரும் சோமாஸ்கந்தரும் மகாலெட்சுமியும் விளங்குகின்றனர். வடக்குப் பிரகாரத்தில் அம்பாள் கோயிலை அடுத்துப் பள்ளியறை உள்ளது. பருதிலிங்கமும் பயிரவரும் நவக் கிரகங்களும் உள்ளனர். கிழக்குப் பிரகாரத்தில் சூரியனும் சந்திரனும் தெற்குப் பிரகாரத்தில் பிர்மா முதலிய மூர்த்திகளும் உள்ளனர். சுவாமி சந்நிதியின் நுழைவாயிலில் விநாயகர் முருகன் உள்ளனர். மகா மண்டபத்தில் நடராசர் சலந்தராசுரனைச் சம்கரித்த மூர்த்தி பஞ்ச மூர்த்திகள் உள்ளனர். சுவாமி சந்நிதியில் துவார விநாயகரும் துவாரபாலகர்களும் உள்ளனர்.

அருள்மிகு வீரட்டானேசுவரர் சந்நிதி மிக்க விளக்கமுடையதாய்த் திகழ்கிறது. அம்பாள் அருள்மிகு பரிமள நாயகியம்மை பக்தர்களுக்கு அருள்பாலிக்கின்றாள்.

சுவாமி பெயர் அருள்மிகு வீரட்டானேசுவரர். அம்பாள் பெயர் அருள்மிகு ஏலவார் குழலி. பரிமள நாயகி எனவும் வழங்குவர். தலமரம் துளசி, தீர்த்தம் சக்கர தீர்த்தம். எதிரில் உள்ளது. சங்கு தீர்த்தம் பின்புறம் உள்ளது. சலந்தரனைச் சம்கரித்த மூர்த்திகளின் கையில் ஆயுதம் உள்ளது.

கயிலை மலையோரம் கண்ணுதற்கடவுள் திருவுருமாறி நின்றிருந்தார். அப்பொழுது வந்த இந்திரன் 'நீ யார்!' என்று வினவினான். பரமன் பதில் சொல்லவில்லை. இந்திரனை சினந்து விஸ்வரூபம் எடுத்தார். இந்திரன் அஞ்சி நடுங்கி மன்றுளாடும் பெருமானின் திருவடி பற்றி மன்றாடினான். இறைவனின் சினம் தணிந்தது.

சினந்தபொழுது உண்டாகிய வியர்வை நீரை வழித்தெறிந்தார் ஈசனார். அது

மேற்றிசைக் கடலில் வீழ்ந்து புத்திர வடிவாகியது. கடலரையன் அப்புத்திரனைத் தன் மகனாகக் கொண்டு வளர்த்தான். பிரமன் அப்புத்திரனுக்குச் சலந்தரன் என்று பெயர் சூட்டினான்.

சலந்தரன் காலநேமியின் மகள் 'பிருந்தாளை' மணந்தான். தேவ தச்சனாகிய மயனால்ஒரு நகரம் செய்வித்து அதில் வாழ்ந்தான்.

அவுணர்களின் சேர்க்கையினால் தீச்செயல்களை மேற் கொண்டான். தேவர்களுடன் போர் தொடுத்தான். திருமாலும் அவனிடம் தோற்றான். இதனால் அஞ்சிய இந்திரன் இறைவனிடம் தஞ்சம் புகுந்தான்.

இறுதியில் சலந்தரன் கயிலாயத்தையே தாக்க வந்தான். இறைவன் எதிரில் தோன்றி ''சலந்தரா! உனக்குச் சர்வ வல்லமை இருக்குமானால் இங்கே இப்பொழுது நான் காலால் கீறும் சக்கரத்தைச் சிரமேல் ஏற்றுத் தாங்குவாயா''? என்றார். சலந்தரன் ஏளனமாகச் சிரித்தவாறு இசைந்தான். இறைவன் திருவடியால் தரையில் ஒரு சக்கரம்கீறினார். அதனைச் சலந்தரன் மார்பிலும், தோள்களிலுமாகத் தாங்கிச் சிரசின் மேல் கொண்டான். சக்கரம் அவனை இருகூறாக்கி இறைவனிடம் மீண்டது. அவனுடன் வந்த அசுரப்படை சாம்பராகியது. இவ்வீரச் செயலால் சிவன் 'சலந்தராவத மூர்த்தி'' என்னும் திருநாமம் உடையவரானார்.

இவ்வீர வரலாற்றைக் கந்தபுராணச் செய்யுட்கள் விளக்குகின்றன.

'புங்கவர் யாரையும் புறங்கண்டேன், வரு
கங்கையை யடைந்தனன்; கார்கொள்
வேலையில்
அங்கியை அவித்தனன்; அரியை வென்றனன்;
இங்கிது தங்குவது அரிய தோஎனா.''

''புரத்தழல் வௌவியோன் பொறித்த
நேமியைக்
கரத்திடை எடுத்தனன்; கனம்கொண்
டெய்தலின்
உரத்திடைப் புயத்திடை உயர்த்துத் தாங்கியே
சிரத்திடை வைத்தனன் தேவர் ஆர்க்கவே;

''செழுஞ்சுடர்ப் பரிதியைச்சென்னி கோடலால்
ஒழிந்திடு சலந்தரன் உச்சியே முதல்
கிழிந்தது முழுதுடல் கிளந்து சோரிநீர்
இழிந்தது புவிதனில் இழுமென் இசையால்''

சலந்தரவதம் செய்து இறைவன் காட்சி கொடுத்த வெற்றித் தோற்றத்தைக் காஞ்சிப் புராணம் கீழ்வருமாறு காட்டுகிறது.



''இருகூறாகச் சலந்தரனை
இருத்து மாட்டி அவ்வடிவம்
அருகே தோன்றச் சுதரிசன
மங்கைத் தலத்தின் மிசை ஏந்தி
முருகார் கடுக்கைத் தண்ணறும் பூந்
தொடையல் வாகை முடி விளங்கத்
திருவார் காட்சி அளித்தருளும்
தேவர் கோமான் திருவுருவம்''.

திருமால் சலந்தராசுரன் இறந்தபின் அவன் மனைவி பிருந்தையை விரும்பி அவ்வசுரன் வடிவோடு சென்று அவளை அடைந்து இன்புற்றார். பிருந்தை திருமாலின் வஞ்சகச் செயலை அறிந்து அவரைச் சபித்துத் தீயில் விழுந்து உயிர் துறந்தாள். திருமால் பிருந்தை இறந்த சாம்பலில் வீழ்ந்து புரண்டார். தேவர்கள் வருந்திச் சிவபிரானிடம் விண்ணப்பித்தார்கள். அம்பிகை விதை ஒன்றைத் தேவர்கள் கையில் கொடுத்து அச்சாம்பலில் இடுமாறு பணித்தாள். அவ்விதை துளசியாக வளர்ந்து ஒரு பெண் வடிவாயிற்று. திருமால் அதை மார்பின் மீதும் முடிமீதும் அணிந்து மகிழ்ந்தார். திருமால் தமது செயலைஎண்ணி வருந்தி இத்தலத்து இறைவனை வழிபட்டுப் பழிநீங்கினார். நாமும் வழிபட்டு உய்வோமாக.

''வடிகொள்மேனியர் வானமாமதியினர்
நதியினர் மதுவார்ந்த
கடிகொள் கொன்றையஞ் சடையினர் கொடி
யினருடை புலிய தளார்ப்பார்
விடையேறுமெம் மானமர்ந்தினிதுறை
விற்குடி வீரட்டம்
அடியராகிநின் றேத்தவல்லார் தமையருவினை
யடையாவே''

—திருஞானசம்பந்தர்.



# பிரம்மா

ஏ. வி. ராஜகோபாலன்

[ சிறுகதை ]

அவன் ஒரு சிற்பி. ஆனால் சிறிது வித்தியாசமானவன். எந்தக் கல்லுக்குள் எந்தக் கடவுள் உருவம் புகுந்து கொண்டிருக்கும் என்பது அவனுக்குப் பார்த்த மாத்திரத்திலேயே தெரிந்துவிடும். சர்வ சாதாரணமாக பழத்தின் தோலைக் களைந்து சுளையை எடுப்பதுபோல், கல்லுக்குள் இருந்து சிலையை வெளிக்கொணறுவான். அது இவ்வளவுதான் அழகாக மிளிரும் என்று சொல்ல முடியாது. அவனுக்குப் படைப்பதற்கு மட்டும் ஒரு பாறை கிடைத்து விட்டால்போதும். சோறு, தூக்கம் எல்லாம் பின்புதான்.

ஒவ்வொரு முறையும் அவன் ஒரு கடவுள் சிலையைப் படைத்த பிறகு தன் இரண்டு கைகளையும் விரித்துக் கொண்டு வானத்தைப் பார்த்து உரக்கக் கத்துவான்.

''ஆண்டவா! மனிதர்களை நீ படைத்தாயாம். அது நிஜமா பொய்யா என்று எனக்குத் தெரியாது. ஆனால் எனக்கு ஒன்று தெரியும். உன்னை எனக்குப் படைக்கத் தெரியும். இதிலே என்ன வித்தியாசம் தெரியுமா! மனிதனைப் படைத்த உன்னை யாரும் பூமியில் நேரில் பார்த்ததில்லை. ஆனால் உன்னைப் படைக்கும் என்னை? இந்த ஊரே உலகமே கண்டு வியக்கிறது தெரியுமா! இதிலே யார் உசத்தி! நீயா, நானா? நீ படைப்பாளி வெறும் கதைகளில். ஆனால் நானோ படைப்பாளி என்று நிரூபணமானவன். உன்னையே படைக்கும் படைப்பாளி, ஹஹ்ஹா.......'' அவனுடைய குரல் நான்கு பக்கமும் பரவி காற்றில் கரைந்த உடன், 'என்ன ஆண்டவா, என் சவாலுக்குப் பதிலில்லையா? என்பது போல் பெரிதாகச் சிரிப்பான்.

அன்று ஊருக்கு வெளியே ஒரு பெரிய பாறையைப் பார்த்தபோது அவன் ஆனந்தத்தில் துள்ளினான். ''இதோ, பார், இதிலே உலகைப் படைத்த பிரும்மனையே நான் படைக்கிறேன்,'' உரக்கச் சொன்னான்.

அவ்வளவுதான்— சிற்றுளியும், சுத்தியலும் அவன் கைகளிலே விளையாட ஆரம்பித்தன. சில மணி நேரங்கள்தான். ஏதோ துணியினால் போர்த்தி வைக்கப்பட்ட சிலை அந்த துணி நீக்கப்பட்ட உடன் 'பளிச்'சென வெளிப்படுவதுபோல் உருப்பெற்றது அது. சிலையை விட்டு சில அடிகள் விலகிப் பின்சென்று அந்த பிரும்மன் சிலையைப் பார்த்தான். 'முகத்தில் ஒரு சிரிப்பை வரவழைப்போமா!' யோசித்தான். அந்த யோசனையைத் தொடர்ந்து, அவனே சிரித்துக் கொண்டான். 'நீ ஒரு படைப்பாளி! உனக்கே ஒரு சிரிப்பை வைப்பதென்றால் நான்தான் முடிவு செய்ய வேண்டும்.

சிலையை அவன் நெருங்கு முன் பின்புறம் அவனை யாரோ தொட்டது போலிருக்கவே திரும்பிப் பார்த்தான். அவனுடைய தாய்க் கிழவி. 'என்னம்மா, என்னைத் தேடி இங்கே வந்துட்டே!'. அவளை ஆதங்கத்தோடு கேட்டான்.

'போடா'. கிழவி சலித்துக் கொண்டே காலைப் பிடித்துக்கொண்டு கீழே உட்கார்ந்து விட்டாள். அழும் குரலில் சொன்னாள். 'ஒன் மாமியா ஊட்லேந்து ஆள் வந்து சொன்னான்டா. இந்தத் தடவையும் ஒம் பொண்டாட்டிக்கு குறைப் பிரசவம் ஆயிடிச்சாம். இந்த ஆண்டவன் என்னிக்குத்தான் ஒனக்கு கண்ணெத் தெறக்கப் போறானோ!''

அவனை அறியாமலேயே படைத்த சிலையின் முகத்தை அவன் பார்த்தான். அவன் வைக்காத சிரிப்பு அதன் முகத்திலே இப்போது இருப்பதுபோல் அவனுக்குத் தோன்றியது.

# திருக்கோயில் வழிபாட்டு முறை

சிவநெறிச் செம்மல் ந. ரா. ஆடலரசு

இடரகற்றி எச்செயலும் முற்றவருள் எந்தை
கடகரிமு கன்தாளே காப்பு.

**முன்னுரை**: ''திருக்கோயிலில்லாத ஊர் திருவில் ஊர்'' என்றார் நம் சமயாசிரியராகிய திருநாவுக்கரசர். 'கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்'' ''ஆலயம் தொழுவது சாலவும் நன்று'' என்பன ஒளவைப் பிராட்டியின் அருள் மொழிகள், நம்நாட்டுப் பண்பாட்டிற்கும், அறிவு, ஆற்றல், கலைத்திறம், அறவுணர்வு, அருள் நெறித் தெளிவு முதலியவற்றிற்கும் நிலைக்களமாக-முடிமணியாக விளங்குவன திருக்கோயில்கள், பெரிய கோயில்கள் இருக்கும் ஊர், எப்போதும் கிளர்ச்சியுடன் விழாக்கள் கலைநிகழ்ச்சிகள், அருளுரைகள் அறச் செயல்களுடன் மங்களமாக இருக்கும்.

**சிவன் கோயில் சிறப்பு** : கோயில் என்றாலே அது பிறப்பு இறப்பில்லாத முழு முதற் கடவுளான சிவபிரான் கோயிலையேகுறிக்கும். தமிழகத்தில் ஒவ்வோர் ஊரிலும் பற்பல கோயில்கள் இருப்பினும், அவற்றுள் பெரும் பாலும் சிவன் கோயிலே பெரியதாக இருக்கும். மற்ற கோயில்கள் அதன் சுற்றுக் கோயில் களாகவோ, அதனுள் அடங்கிய கோயில்களாகவோ தாம் இருக்கும். அதனால் இங்கே 'வழி பாட்டு முறை' என்று சுருக்கமாகக் கொடுக்கப் பட்டுள்ளவை, பெரிய கோயில் என ஆங்காங்கு குறிக்கப்படும் சிவபிரான் கோயில் வழிபாட்டு முறையேயாகும்.

**கோயிலுக்குப் போகும் காலமும் முறையும் :**
திருக்கோயிலுக்குச் சென்று வழிபடும் ஆர்வமும் அன்பும் உடையவர்கள், தம் வசதிக் கேற்பக் காலை, நண்பகல், மாலை என்னும் முப்போதும், இயன்ற ஓரிருவேளையிலும் வழி படலாம். நாடோறும் ஒரு வேளையேனும் திருக்கோயிலுக்குச் சென்று வழிபடுவது சிறப் பும் நலமும் பல பயப்பதுமாகும். இயலாத வர்கள் கிழமைக்கு (வாரம்)ஓரிரு முறை திங்கள் வெள்ளி முதலிய நாட்களிலும், மாதக் கார்த் திகை, திருவாதிரை, முழுநிலா, பிரதோஷம், சஷ்டி முதலிய சிறப்பு நாட்களிலும் திருக் கோயிலுக்குச் சென்று முறையாக வழிபடுவது நல்லது.

நீராடித் தூய ஆடை உடுத்தி மேலாடையை இடுப்பில் சுற்றிக் கட்டிக் கொண்டு



திருநீறு, சந்தனம், குங்குமம், சிவமணி (உருத் திராக்கம்) முதலிய சிவசின்னங்களை அணிந்து ஒருமனப்பட்ட உணர்வுடன் திருக்கோயிலுக்குச் செல்லுதல் வேண்டும்.

திருக்கோபுரம் விமானம் அல்லது திருக் கோயிலைக் கண்ட இடத்திலேயே அதை நோக்கிக் கீழே விழுந்து வணங்குதல் நல்லது. இயலவில்லையேல் கரங்களைச் சிரமேற் கூப்பி கும்பிடுக. தேவாரம், திருவாசகம், திருப்புகழ் அருட்பாப் பாடல்களை மெதுவாகப் பாடிக் கொண்டே மாடவீதிகளை அருள் நினைவுடன் வலம் வருதல் மிகவும் சிறப்பாகும்.

**திருவாயிலில்** : திருக்கோயிலின் வாயில் அல்லது கோபுரவாசலை நெருங்கியதும் இரு பக்கமும் உள்ள பிள்ளையார், முருகன் திரு முன்னிலைகளை வணங்கிய பின் வாயிற்படியைத் தொட்டுக் கும்பிட்டு, அங்கே அதிகார

நந்தியை நினைந்து ஏற்ற பாடல் சொல்லி வணங்கி அவர் இசைவு பெற்றுக் கோயிலுக்குள் நுழைவதாகப் பாவித்துக் கொண்டு நேரே பலிபீடமும் கொடி மரமும் உள்ள இடத்துக் குச் செல்லுதல் வேண்டும்.

**பலிபீடம் கொடி மரம் அருகில்** : பலிபீடத் திற்குத் தென் கிழக்கு மூலையில் வடக்கு நோக்கிக் கீழே விழுந்து வணங்குதல் வேண்டும். மும்முறை வணங்குதல் சிறப்பு; மேற்கு நோக் கிய கோயிலாயினும் பலிபீடத்தருகில் வடக்கு நோக்கியே வணங்குதல் வேண்டும். கோயி லுக்குள்ளே வேறு எந்த இடத்திலும் கீழே விழுந்து வணங்குதல் கூடாது. பலிபீடத்தை யும், கொடி மரத்தையும் பார்த்து, முறையே இழிவான எண்ணங்களையும் பற்றையும் விட்டு விட்டதாகவும், அருளுணர்வில் உயர்ந்து நிற்ப தாகவும் எண்ணுதல் வேண்டும் (பெரும் பாலான கோயில்கள் கிழக்கு நோக்கியே இருக் கும். அவ்வகையிலேயே இந்த வழிபாட்டு முறை கூறப்பட்டுள்ளது).

**திருச்சுற்றுகளில்** : பிறகு மேலே குறிப் பிட்டபடி திருமுறை அருட்பாடல்களை ஓதிக் கொண்டே வெளித் திருச்சுற்றை(பிரகாரத்தை) வலம் வருதல் வேண்டும் மீண்டும் பலிபீடத் தருகில் முன்போல் விழுந்து வணங்கி நந்தி யெம்பெருமானைக் கும்பிட்டு உள்திருச்சுற்றுக் குச் சென்று வலம் வரும்போது சமயகுரவர் நால்வரையும், 63 அடியார்களையும், தென் மேற்கு மூலையில் எழுந்தருளியுள்ள தல விநாயகரையும், தென் முகமாக வீற்றிருக்கும் ஞான மூர்த்தியாகிய தட்சணாமூர்த்தியையும், மூலவருக்குப் பின்புறம் திருமாலையும்அடுத்துக் கீழ்த்திசை நோக்கியுள்ள முருகன்—திருமகள்-கலைமகள் திருமுன்னிலைகளையும் உரிய பாடல்கள் சொல்லி வழிபடுதல் வேண்டும். பின் வடதிசை நோக்கியுள்ள நான்முகக் கடவு ளையும், துர்க்கை என்னும் வெற்றி தரும் கொற்றவையையும் வணங்கித் தெற்கு நோக்கி யுள்ள முழுமுதற்கடவுளாகிய அம்பலவாணர் (நடராசர்) திருமுன்னிலையை அடைதல் வேண்டும். படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழில் களும் நடைபெறவும், அதனால் உயிர்களனைத் தும் படிப்படியே மலமகன்று உலக பந்தத்தி லிருந்து விடுபட்டு வீடு பேற்றையடையவும் நடனம் புரியும் அவருடைய பேரருளையும் பேரழகையும் நினைந்துருகி ஏற்ற திருமுறைப் பாடல்கள் ஓதிக் கும்பிடுதல் வேண்டும். இத் திருச்சுற்றை மும்முறை வலம் வந்து சந்திர சேகரர், சோமாஸ்கந்தர் முதலிய உற்சவ மூர்த்திகளையும் கண்குளிரக் கண்டு கும்பிடு தல் வேண்டும்

**மூலவரிடத்தில்** : பின் முழுமுதற்கடவுள் இலிங்கமாகிய சோதி (அருவுருவ) வடிவில் மூல வராக எழுந்தருளியுள்ள கருவறை முன்சென்று சந்நிதியை மறைக்காமல் ஒதுங்கி நின்று, இயன்ற அளவு பன்னிரு திருமுறைப் பாடல் களை வரிசையாகவும் அல்லது பஞ்சபுராணம் எனப்படும் தேவாரம், திருவாசகம், திரு



விசைப்பா, திருப்பல்லாண்டு, பெரியபுராணம் பாடல்களை வரிசைப்படி மன ஒருமையுடன் உருக்கமாகவும் ஓதி வணங்குதல் வேண்டும். சிர மேல் கைகூப்பித் தொழுதல் வேண்டும். குறைந்த அளவு பஞ்ச புராணப்படி ஐந்து பாடல்களேனும் பாடுதல் வேண்டும். இயன்ற வர்கள் தம் வசதிப்படி தேங்காய், பழம், பூ, கற்பூரம், ஊதுவத்தி முதலியவைகளை வாங்கிக் கொண்டு போய், குருக்களிடம் கொடுத்து அருச்சனை அல்லது ஆராதனை செய்வித்துக் கும்பிடுதல் வேண்டும். இறைவனுக்கு மிகவும் விருப்பமான திருமுறைப் போற்றிப் பாடல்கள் ஓதி அருச்சனை செய்வித்தல்மிக்க சிறப்பாகும். பின் குருக்களிடம் திருநீறு பெற்று அண்ணாந்து 'சிவ சிவ' என்று சொல்லிக் கீழே சிந்தாமல் உச்சி, நெற்றி, மார்பு முதலிய இடங்களில் அணிந்து கொண்டு இயன்ற காணிக்கை செலுத்தி மூலவருக்கு முதுகைக் காட்டாமல் ஒருக்களித்த வாக்கில் வெளி வந்து அம்மை திருமுன் சென்று உரிய பாடல்கள் சொல்லி வழிபட்டு வசதிப்படி ஆராதனை செய்வித்து வணங்குதல் வேண்டும்.

**இறுதிச்சுற்று** : மீண்டும் உள்திருச் சுற்றை வலமாக வந்து வடபகுதியில் அபிடேக தீர்த்தம் விழும் இடத்தில் வீற்றிருக்கும் சண் டேசுவரரைக் குறுக்கே செல்லாமல் வலமாக வந்து, ஈசன் திருவருளிலேயே திளைத்திருக் கும் அவர் கருத்தை நம்பால் ஈர்ப்பதாகப் பாவித்து மெதுவாகக் கைகளைத் தட்டிஅல்லது சிட்டிகையிட்டு வணங்கி, திருக்கோயிலை வழி பட்ட பயனை அருளுமாறு வேண்டிக்கொண்டு இறுதியாக வயிரவர் எழுந்தருளியுள்ள இடத் துக்குச் சென்று திருநீறு, தேங்காய், பழம், பூ முதலிய அருளமுதம் (பிரசாதம்) அல்லது வேறு எப்பொருளையும் திருக்கோயிலில் இருந்து எடுத்துச் செல்லவில்லை என்பதாக மனதாரச் சொல்லி வணங்கி விடை பெற்று வெளியே வருதல் வேண்டும்.

**தேனித்து வாழ்த்துக் கூறல்** : மீண்டும் பலிபீடத்தருகில் வந்து முன்போல் விழுந்து



வணங்கிக் கும்பிட்டு எழுந்து நேராக வடக்கு நோக்கி அமர்ந்து சிறிது நேரம் கண்ணை மூடி மௌனமாக இருந்து திருவருளைத் தேனித்தல் (தியானித்தல்) வேண்டும். முடிவில் உலக நலம் கருதி வாழ்த்துக் கூறி எழுந்து மண்டபங்களில் வாய்ப்பான இடத்தில் சிறிது நேரம் அமர்ந்து (முடிந்த அளவு அருட் பாடல்களைப் பாடலாம். அருள் நூல்களைப் படிக்கலாம்) பின் வீட்டுக்குச் செல்லுதல் வேண்டும்.

**சில குறிப்புகள்** : எல்லாக் கோயில்களிலும் மேலே குறிப்பிட்ட எல்லாத் தெய்வத் திருவுருவங்களும் இருக்க மாட்டா; எனினும் குறிப்பிட்ட இடங்களில் அந்த அந்த தெய்வங்களை எண்ணி கும்பிடுதல் வேண்டும். பல்வேறு தெய்வ வடிவங்களைப் பார்த்து வணங்கினாலும், அவர்கள் அனைவரும் முழுமுதற் கடவுளுக்கு அடங்கி அவர் அருளினாலே தத்தம் பணிகளைச் செய்து வரும் தேவர்களே எனத் தெளிந்து முழு முதல்வனுக்கே அல்லது முழு முதல்வனாக எண்ணித் தாம் தாம் வழிபடும் மூர்த்திக்கே முதன்மை கொடுத்து வழிபாடாற்றுதல் வேண்டும். முழுமுதற் கடவுள் ஒன்றே, அவனடியார்கள் அனைவரும் ஒரு குலமே, என்கிற தெளிவு இருத்தல் வேண்டும். பிள்ளையார், முருகன், தென்முகக் கடவுள், அம்பலவாணர், அம்மை, சந்திரசேகரர், உமைமுருகீசர் (சோமாஸ்கந்தர்) வயிரவர் முதலிய தெய்வங்கள் முழுமுதற் கடவுளின் கூறு (அம்சமே) என்பதையும் மற்றைய தெய்வங்கள் யாவும் அவர் அருள் பெற்ற தேவர்கள்—அதிதேவதைகள் என்பதையும் மனத்துட் கொள்ளுதல் வேண்டும்,. பிள்ளையாரிடம் இரு கன்னங்களிலும் குட்டிக் கொண்டும், கைமாறி இரு காதுகளையும் பிடித்துக் கொண்டு தோப்புக் கரணமிட்டும் வணங்குதல் வேண்டும். திருக்கோயிலுக்குள் ஆங்காங்கு எல்லாத் திசைகளிலும் பல தெய்வத் திருவுருவங்கள் மற்றும் அருவமாக ஆங்காங்கு வழிபட வந்துள்ள தேவர்கள் இருப்பதால் பலிபீடத்தருகில் மட்டுமே கீழே விழுந்து வணங்குதல் வேண்டும். கோயிலுக்குள்ளே வேறு எங்கும் கீழே விழுந்து வணங்குதல் கூடாது என்று விதிக்கப்பட்டிருக்கிறது. கூடுமான வரை நந்திக்கும் மூலவருக்கும் இடையில் போதல் கூடாது. சண்டேசுவரருக்கும் தீர்த்தம் விழும் இடத்துக்கும் இடையில் போகவே கூடாது. சிலர் அவர் மீது நூல் முதலியவைகளைப் போடுகிறார்கள். அது மிகவும் தவறான செயலாகும். கோயிலுக்குள்ளே அருள் நெறித் தொடர்பில்லாத வேறு வீண் பேச்சுக்களைப் பேசுதல் கூடாது. சந்நிதிகளை மறைத்துக் கொண்டு நிற்றல், பிறர் வழிபாட்டுக்கு இடையூறாக இருத்தல், பலரும் மன ஒற்றுமை கெட்டுப் பார்க்கிற மாதிரி உரத்த குரலில் பாடுதல் (ஓதுவார் மட்டும் இதற்கு விலக்காவார்) முதலியன கூடாது. திருக்கோயில் வழிபாட்டின்போது தத்தம் குறைகளை மட்டும், தேவைகளை மட்டும் கூறி அருள் நெறியுணர்வு பெருகி அமைதியும் அன்பு நிலைக்கவும், இயற்கைச் சீற்றங்கள் நேராமல் மழை நிறைவாகப் பெய்து எங்கும் வளம் சிறக்கவும் வேண்டிக் கொண்டு இறுதியில் பொது வாழ்த்துக் கூறுதல் வேண்டும். திருக்கோயில் வழிபாட்டில் இது முதன்மையான குறிக்கோளாகும். இனி கோயிலுக்குள் செய்யத்தக்க தொண்டுகள், செய்யத்தகாத குற்றங்கள் என்று இருப்பவைகளை அறிந்து அவற்றுக்கேற்ப ஒழுகுதல் வேண்டும். கோயிலிடங்களைத் தூய்மையாக வைத்தல், வைக்க உதவுதல், திருவிளக்கிடுதல், பூமாலை தொடுத்துக்

கொடுத்து மூர்த்திகளுக்குச் சூட்டுமாறு செய்தல் முதலியன சிறந்த தொண்டுகளாகும்.

இனி, உலகமெங்குமுள்ள எந்தச் சமயத்திலும் எந்த மொழியிலும் இணை சொல்ல இயலாதபடி, ஆயிரமாண்டுகட்கு முற்பட்டவைகளாய் விளங்கும் இந்த நாட்டின் மொழி, நாகரிகம், பண்பு, கலை, அருள்நெறித் தெளிவுகளைக் காத்து வரும் தெய்வ ஒண் தீந்தமிழ்த் திருமுறைப் பாடல்களையே வழிபாட்டில் முதன்மை கொடுத்து ஓதுதல் வேண்டும்.

திருமுறைகள் மொத்தம் 12 ஆகத் தொகுத்து வகுக்கப்பட்டுள்ளன. அவற்றின் சிறப்பும் பயனும் அளவிட முடியாதனவாம். அவற்றின் சாரமாக, நம் தமிழ் முன்னோர்களின் கடவுட் கொள்கையை விளக்குவன மெய்கண்ட சாத்திரங்கள் எனப்படும் பதினான்கு நூல்களாகும். சமய குரவர்களைப் போலவே இம்மெய்கண்ட நூல்களை அருளிய சந்தான குரவர்களும் போற்றப்பட வேண்டியவர்களாவர்.

**சமயகுரவர் நால்வர் :** சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர்.

**சந்தான குரவர் நால்வர் :** மெய்கண்டார், அருள்நந்தி, மறைஞான சம்பந்தர், உமாபதி சிவம்.

திருமுறைகள் பன்னிரண்டு : அவற்றுள் 1, 2, 3, திருமுறைகளை அருளியவர் திருஞான சம்பந்தர்; 4, 5, 6 திருமுறைகளை அருளியவர் அப்பர் என்னும் திருநாவுக்கரசர்; 7-ஆம் திருமுறை சுந்தரமூர்த்தி என்னும் நம்பி ஆரூரர் பாடியது; இவை ஏழும் பொதுவாகத் தேவாரம் எனப்படும். 8ஆம் திருமுறை மாணிக்கவாசகர் அருளிய திருவாசகம், திருக்கோவையார்; 9-ஆம் திருமுறை திரு விசைப்பா; திருப்பல்லாண்டு—ஒன்பது ஆசிரியர்கள் பாடியவை: 10-ஆம் திருமுறை திருமூலர் அருளிய திருமந்திரம்; 11-ஆம் திருமுறை காரைக்காலம்மையார், பட்டினத்தார் முதலிய 12 பேர் பாடியன. 12-ஆம் திருமுறை சேக்கிழார் பாடிய பெரிய புராணம்.

மெய்கண்ட நூல்கள்: சிவஞான போதம், சிவஞான சித்தியார், இருபாஇருபஃது, சிவப்பிரகாசம், கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, போற்றிப்பஃறொடை, உண்மை நெறி விளக்கம், திருவருட்பயன், வினாவெண்பா, சங்கற்ப நிராகரணம், திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், உண்மை விளக்கம் எனப் பதினான்காகும்.

திருக்கோயிலுக்குப் போகும் போதும், திருச்சுற்றுகளில் வலம் வரும் போதும் ஓதத்தக்கவற்றுள் திருநாவுக்கரசரின் திருவங்கமாலை, திருவாசகத்தில் சிவபுராணம் மற்றும் திருநீற்றுப் பதிகம், ஐந்தெழுத்துப் பதிகங்கள் திருத்தொண்டத் தொகை முதலியன 'குறிப்பிடத்தக்கனவாம்.

## ஆலய வழிபாட்டுக்குதவும் சில பாடல்கள்

**பிள்ளையார் :**

ஐந்து கரத்தனை ஆனை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்தனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்றுகின் றேனே.

**முருகன் :**

முருகனே செந்தில் முதல்வனே மாயோன்
மருகனே ஈசன் மகனே—ஒருகைமுகன்
தம்பியே நின்னுடைய தண்டைக்கால்
எப்பொழுதும்
நம்பியே கைதொழுவேன் நான்.

**நந்தி தேவர்**

வந்திறை யடியில் தாழும்
வானவர் மகுட கோடி
பந்தியின் மணிகள் சிந்த
வேத்திரப் படையால் தாக்கி
அந்தியும் பகலும் தொண்டர்
அலகிடும் குப்பை யாக்கும்
நந்தியெம் பெருமான் பாதம்
நகைமலர் முடிமேல் வைப்பாம்.

**சமயகுரவர் நால்வர்**

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன்
கழல்போற்றி!
ஆழிமிசை கன்மிதப்பில் அணைந்த பிரான்
அடிபோற்றி!
வாழிதிரு நாவலூர் வன்தொண்டர் பதம்
போற்றி!
ஊழிமலி திருவாத வூரர்திருத் தாள்போற்றி!

**அறுபத்துமூவர்**

தத்து மூதெயில் மூன்றும் தழலெழ
முத்து மூரல் முகிழ்த்த நிராமய
சித்து மூர்த்திதன் தாளிணை சேர்அறு
பத்து மூவர் பதமலர்போற்றுவாம்.

**சேக்கிழார்:**

தூக்குசீர் திருத்தொண்டத் தொகைவிரி
வாக்கினால் சொலவல்ல பிரான் எங்கள்
பாக்கியப் பயனாப்பதி குன்றை வாழ்
சேக்கிழான் அடி சென்னி இருத்துவாம்.

**விநாயகர்:**

விநாயகனே வெவ்வினையின் வேரறுக்க
வல்லான்
விநாயகனே வேட்கை தணிவிப்பான்-
விநாயகனே
விண்ணிற்கும் மண்ணிற்கும் நாதனுமாம்
தன்மையினால்
கண்ணிற் பணிமின் கனிந்து.

**தென்முகக் கடவுள்:**

கல்லாலின் புடையமர்ந்து நான்மறை
யாறங்கமுதற் கற்றகேள்வி
வல்லார்கள் நால்வருக்கும் வாக்கிறந்த
பூரணமாய் மறைக்கப்பாலாய்
எல்லாமாயல்லதுமா யிருந்ததனை யிருந்தபடி
யிருந்துகாட்டி
சொல்லாமற் சொன்னவரை நினையாமல்
நினைந்து பவத் தொடக்கை வெல்வாம்

**திருமால்:**

வையந் தகளியா வார்கடலேநெய்யா
வெய்ய கதிரோன் விளக்காக—செய்ய
சுடராழியான் அடிக்கே சூட்டினேன்சொல்
மாலை
இடராழி நீங்குகவே என்று.

திருக்கண்டேன் பொன்மேனிகண்டேன் திகழும்
அருக்கன் அணிநிறமும் கண்டேன்
செருக்கிளரும்
பொன்னாழி கண்டேன் புரிசங்கம் கைக்
கண்டேன்
என்னாழி வண்ணன்பால் இன்று.

பன்னிரு கரத்தாய்போற்றி! பசும்பொன்
மாமயிலாய் போற்றி!
முன்னிய கருணை ஆறு முகப்பரம் பொருளே
போற்றி!
கன்னியர் இருவர் நீங்கா கருணைவா ரிதியே
போற்றி!
என்னிருகண்ணே கண்ணுள் இருக்கும்
மாமணியே போற்றி!

**திருமகள்:**

திரண்டு முனிவரிரு பாலுஞ் சிறந்து தினமுஞ்
சேவிப்ப
வரந்தந்தருளும் பெண் கொடியை வடிவேற்
குமரன் மணக்கோலம்
புரிந்த வழகை யிருவிழிக்கு விருந்தா யருந்தும்
புத்தமுதை
பரங் குன்றமர்ந்த செழுந்திருவைப் பணிந்து
திருவைப் பொருந்துவோம்

**கலைமகள்**

ஆயகலைக ளறுபத்து நான்கினையும்
ஏய உணர்விக்கும் என்னம்மை—தூய
உருப்பளிங்கு போல்வாளென் னுள்ளத்தி
னுள்ளே
இருப்பளிங்கு வாரா திடர்.

**கொற்றவை** (துர்க்கை)

கொற்றவையே குற்றம்புரிவோரைத்தண்டித்து
நற்றிறமே சேர நயந்தருளி—வெற்றிதரும்
நற்றாயே என்றன் நலிவகற்றி ஆட்கொள்வாய்
உற்றவெனை உன்பால் உவந்து.

**அம்பலவாணர்** (நடராசர்)

ஒன்றியிருந்து நினைமின்கள் உந்தமக்கு
ஊனமில்லை
கன்றிய காலனைக் காலால் கடிந்தான்
அடியவற்காச்
சென்று தொழுமின்கள் தில்லையுள் சிற்றம்
பலத்துநட்டம்
என்று வந்தாயென்னும் எம்பெருமான்றன்
திருக்குறிப்பே.
படைக்கல மாகவுன் நாமத் தெழுத்துஅஞ்சு
என் நாவிற் கொண்டேன்
இடைக்கலமல்லேன் எழுபிறப்பும் உனக்காட்
செய்கின்றேன்
துடைக்கினும் போகேன் தொழுது வணங்கித்
தூநீறணிந்துன்,
அடைக்கலம் கண்டாய் அணிதில்லைச்
சிற்றம்பலத்தரனே,

## பன்னிரு திருமுறைப்பாடல்கள்

திருச்சிற்றம்பலம்

**முதல் திருமுறை:**

தோடுடைய செவியன் விடையேறி ஓர்
தூவெண் மதிசூடிக்
காடுடைய சுடலைப்பொடிபூசி என்உள்ளம்
கவர்கள்வன்
ஏடுடைய மலரான் முனைநாள் பணிந்தேத்த
அருள்செய்த
பீடுடைய பிரமாபுரம் மேவிய பெம்மான்
இவனன்றே!

உண்ணாமுலை உமையாளொடும் உடனாகிய
ஒருவன்
பெண்ணாகிய பெருமான்மலை திருமா
மணிதிகழ
மண்ணார்ந்தன அருவித்திரள் மழலைம்
முழவதிரும்
அண்ணாமலை தொழுவார்வினை வழுவா
வண்ணம் அறுமே!

**இரண்டாந் திருமுறை:**

மந்திரமாவது நீறு வானவர் மேலதுநீறு
சுந்தரமாவது நீறு துதிக்கப்படுவதுநீறு
தந்திரமாவது நீறு சமயத்தில் உள்ளதுநீறு
செந்துவர் வாயுமை பங்கன் திருஆலவாயான்
திருநீறே!
எங்கேனும் யாதாகிப் பிறந்திடினும்
தன்னடியார்க்கு
இங்கேயென்று அருள்புரியும் எம்பெருமான்
எருதேறிக்
கொங்கேயும் மலர்ச்சோலைக் குளிர்பிரமபுரத்
துறையும்
சங்கே ஒத்து ஒளிர்மேனிச் சங்கரன்தன்
தன்மைகளே.

**மூன்றாம் திருமுறை :**

துஞ்சலும் துஞ்சல் இலாத போழ்தினும்
நெஞ்சகம் நைந்து நினைமின் நாள்தொறும்



வஞ்சகம்அற்று அடி வாழ்த்த வந்தகூற்று
அஞ்ச உதைத்தன அஞ்செழுத்துமே!

காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
ஓதுவார்தமை நன்னெறிக்கு உய்ப்பது
வேதம் நான்கினும் மெய்ப்பொருளாவது
நாதன் நாமம் நமச்சிவாயவே.

## அப்பர் தேவாரம்

### நான்காம் திருமுறை:

சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணையாவது நமச்சிவாயவே.

மாதர் பிறைக்கண்ணியானை மலையான் மகளொடும்பாடி
போதொடு நீர்சுமந் தேத்திப் புகுவார் அவர் பின் புகுவேன்
யாதும் சுவடு படாமல், ஐயாறு அடைகின்ற போது
காதல் மடப்பிடியோடும் களிறுவருவன கண்டேன்
கண்டேன் அவர் திருப்பாதம் கண்டறியாதன கண்டேன்!

### ஐந்தாந் திருமுறை:

அன்னம் பாலிக்கும் தில்லைச்சிற்றம்பலம்
பொன்னம் பாலிக்கும் மேலுமிப் பூமிசை
என்னம் பாலிக்கு மாறுகண் டின்புற
இன்னம் பாலிக்குமோ இப்பிறவியே!

மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே!

### ஆறாம் திருமுறை:

வாயானை மனத்தானை மனத்துள் நின்ற
கருத்தானைக் கருத்தறிந்து முடிப்பான் தன்னை
தூயானைத் தூவெள்ளை ஏற்றான் தன்னைச்
சுடர்த்திங்கள் சடையானைத் தொடர்ந்து நின்றஎன்
தாயானைத் தவமாய தன்மை யானைத்
தலையாய தேவாதி தேவர்க் கென்றும்
சேயானைத் தென்கூடல் திருஆல வாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே!

வேற்றாகி விண்ணாகி நின்றாய் போற்றி!
மீளாமேஆளென்னைக் கொண்டாய்போற்றி!
ஊற்றாகி உள்ளே ஒளித்தாய் போற்றி!
ஓவாத சத்தத்து ஒலியே போற்றி!
ஆற்றாகி அங்கே அமர்ந்தாய் போற்றி!
ஆறங்கம் நால்வேதம் ஆனாய் போற்றி
காற்றாகி எங்கும் கலந்தாய் போற்றி!
கயிலை மலையானே போற்றி போற்றி!

## சுந்தரர் - திருப்பாட்டு

### ஏழாந்திருமுறை:

பித்தா பிறைசூடீ பெருமானே அருளாளா
எத்தான் மறவாதே நினைக்கின்றேன் மனத்துன்னை
வைத்தாய் பெண்ணைத் தென்பால்
வெண்ணெய் நல்லூர் அருட்டுறையுள்
அத்தா உனக் காளாயினி அல்லேன் எனலாமே!

செண்டாடும் விடையாய் சிவனே என்செழுஞ்சுடரே
வண்டாரும் குழலாள் உமைபாகம் மகிழ்ந்தவனே
கண்டார் காதலிக்கும் கணநாதனெங் காளத்தியாய்
அண்டா உன்னையல்லால் அறிந்து ஏத்த மாட்டேனே!

## மாணிக்கவாசகர் - திருவாசகம்

### எட்டாந் திருமுறை:

மெய்தான் அரும்பி விதிர்விதிர்த்து உன்
விரையார் கழற்கென்
கைதான் தலைவைத்துக் கண்ணீர் ததும்பி
வெதும்பி உள்ளம்
பொய்தான் தவிர்ந்து உன்னைப் போற்றி
சயசய போற்றி என்னும்
கைதான் நெகிழவிடேன் உடையாய் என்னைக்
கண்டு கொள்ளே!

உம்பர்கட்கு அரசே ஒழிவற நிறைந்த
யோகமே ஊத்தையேன் தனக்கு
வம்பெனப் பழுத்தென்குடி முழுதாண்டு
வாழ்வற வாழ்வித்த மருந்தே
செம்பொருள் துணிவே சீருடைக் கழலே
செல்வமே சிவபெரு மானே
எம்பொருட்டு உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந்து அருளுவது இனியே.

## திருவிசைப்பா

### ஒன்பதாம் திருமுறை:

தனதனற் றோழா சங்கரா சூல
பாணியே தாணுவே சிவனே
கனகநற் றூணே கற்பகக் கொழுந்தே
கண்கள் மூன்று உடையதோர் கரும்பே,
அனகனே குமரவிநாயக சனக
அம்பலத்து அமரசே கரனே
உனகழ லிணையென் நெஞ்சினுள் இனிதாக்
கொண்டனேன் நுகருமா று கரே!

## திருப்பல்லாண்டு

குழலொலி யாழொலி கூத்தொலி ஏத்தொலி
எங்கும் குழாம் பெருகி
விழவொலி விண்ணளவும் சென்று விம்மி
மிகுதிரு வாரூரின்
மழவிடையாற்கு வழிவழி ஆளாய்
மணஞ்செய் குடிப்பிறந்த
பழவடி யாரொடுங் கூடிஎம் மானுக்கே
பல்லாண்டு கூறுதுமே!

## திருமூலர் திருமந்திரம்

### பத்தாம் திருமுறை

கங்காளன் பூசும் கவசத் திருநீற்றை
மங்காமற் பூசி மகிழ்வரே யாமாகின்
தங்கா வினைகளும் சாரும் சிவகதி
சிங்காரமான திருவடி சேர்வரே!

சிவசிவ என்கிலர் தீவினை யாளர்
சிவசிவ என்றிடத் தீவினை மாளும்
சிவசிவ என்றிடத் தேவரும் ஆவர்
சிவசிவ என்ன சிவகதி தானே!

### பதினோராம் திருமுறை:

பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாம் காதல்
சிறந்துநின் சேவடியே சேர்ந்தேன்—
நிறந்திகழும்
மைஞ்ஞான்ற கண்டத்து வானோர்பெருமானே
எஞ்ஞான்று தீர்ப்ப திடர்.

## பெரியபுராணம்

### பன்னிரண்டாம் திருமுறை

உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்
நிலவுலாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்.

என்றும் இன்பம் பெருகும் இயல்பினால்
ஒன்று காதலித்து உள்ளமும் ஓங்கிட
மன்றுளார் அடியார் அவர் வான்புகழ்
நின்ற தெங்கும் நிலவி உலகெலாம்.

திருச்சிற்றம்பலம்

## முருகன் திருமுன் பாடுதற்கு

பத்தியால் யான்உனைப் பலகாலும்
பற்றியே மாதிருப் புகழ்பாடி
முத்தனா மாறெனைப் பெருவாழ்வின்
முத்தியே சேர்வதற்கு அருள்வாயே!
உத்தமா தான்சற் குணர்நேயா
ஒப்பிலா மாமணிக் கிரிவாசா
வித்தகா ஞானசத் திநிபாதா
வெற்றிவே லாயுதப் பெருமாளே!

## அம்மை திருமுன் பாடுதற்கு

தனந்தரும் கல்விதரும் ஒருநாளும் தளர்வறியா
மனந்தரும் தெய்வ வடிவும் தரும்நெஞ்சில்
வஞ்சமில்லா
இனந்தரும் நல்லன எல்லாம் தரும் அன்பர்
என்பவர்க்கே
கனம்தரும் பூங்குழலாள் அபிராமி கடைக்
கண்களே!

## சண்டேசுவரர் துதி

பொன்னங் கடுக்கை முடிவேய்ந்த
புனிதர்க்கமைக்கும் பொருளன்றி
மின்னும் கலன் ஆடைகள் பிறவும்
வேறுதமக்கென்றமையாமே
மன்னும் ஈசன் பூசனையின்
மல்கும் பயனை அடியார்கள்
துன்னும் படிபூ சனை கொள்ளும்
தூயோன் அடித்தாமரை தொழுவாம்.

## வாழ்த்து

வான்முகில் வழாது பெய்க! மலிவளம் சுரக்க!
மன்னன்
கோன்முறை அரசு செய்க! குறைவிலாது
உயிர்கள் வாழ்க!
நான்மறை அறங்கள் ஓங்க! நற்றவம் வேள்வி
மல்க?
மேன்மை கொள் சைவ நீதி விளங்குக!
உலகமெல்லாம்

# சக்திதரும் பக்தி மார்க்கம்

நல்லாசிரியர் **வெ. சுந்தரம் ஐயர்**, பரமக்குடி

''இறைவனின் அகண்ட பரிபூரண சக்தி சாந்தமான தென்றல் காற்றாகத்தான் பரவி வருகிறது. புயலாக அல்ல இறைவனது அன்பிலே அருளிலே எனக்குப் பூரண நம்பிக்கை உண்டு என்பதை எனது இறுதி வார்த்தையாகச் சொல்லி முடித்துக் கொள்கிறேன்,''-இது ரவீந்திரநாத் தாகூர் அவர்களின் உரையின் தமிழாக்கம்.

இறைவன் பஞ்சபூத வடிவில் அருள்பாலிப்பது அறிந்த ஒன்றே. நிலத்தில் உருவான பொருள்களால் கோயில் கட்டி வழிபடுதல், நில வணக்கம் ஆகிறது. விளக்கொளியைத் திருவிளக்கு வழிபாடு மூலம் செய்வது, 'தீ' எனும் ஒளியாகும். புனித நீர்களாக நதிகள், கோயில் திருக்குளங்களைக் கொள்வதும், மற்றும் கும்ப நீர் புனித மந்திரங்களால்சிறப்படைந்துதீர்த்தமாக விளங்குகிறது. வானத்தில் வலம் வரும் சூரிய சந்திரர்களை வணங்குவது ஆகாய வணக்கமாகிறது. இதை விளக்கவே மகாகவி பாரதியும், 'சுட்டும் விழிச் சுடர்தான் கண்ணம்மா'! சூரிய சந்திரரோ' என்று அன்னையின் அருள் புரியும் கண்களை விவரிக்கிறார்.

உயிர் வாழ இன்றியமையாதது காற்று. 'ஓம்' எனும் ஒலியே காற்றின் அதிர்வுகளால் ஏற்படுவது தானே! உயிர் காற்று உள்ளவரை இறை நாமம் உச்சரிக்கப்படும்போது உடல் முழுதும் பரவுகிறது. இறைச் சக்தியை உடலுக்கு அளிக்கிறது.

தாய் முதல் தெய்வம். எனவே குடியிருந்த கோயில் எனப் பேசுகிறோம். 'குடியிருந்த கோயில் தாய் என்றால் இறைவன் யார்? என்ற வினா எழத்தான்செய்யும்.

எல்லாமாகி நின்று பரிபூரண நிலையில் உள்ள இறைவன் தாயின் கருப்பையில் உள்ள கருவை வளர்த்து உருவாக்கி உயிர்ப் பொருளாக்கி (தாயின் வயிற்றில் குழந்தையின் ஆறாவது மாதத்தில் தான் உயிர்நிலை உருவாகின்றதென்பர்) வளர்ச்சி பெறச் செய்து உரிய காலத்தே வெளிவரச்செய்விப்பவர் யார்?

எல்லோரது உள்ளத்திலும் இறையம்சம் இருந்தாலும் தாயின் உடலில் இறைச் சக்தி கூடுதலாக அமைகின்றது. இருட்டிலே, நீரிலே இருக்கும் அக்குழந்தைக்கு பாதுகாப்பு யார்? வெளியில் வந்த குழந்தைக்கு, இருட்டைக் கண்டு பயப்படும் அக்குழந்தைக்குப் பெற்றவர்கள் துணையிருப்பது இயற்கை. இதுபோல் கருப்பையில் இருட்டில் உள்ள குழந்தைக்குத் துணையாக இறைவன் இருப்பது உறுதி.



எனவேதான் கருவுற்ற தாய் இறைபக்தியும், நல்லவைகேட்டல், நல்லவை பார்த்தல், நல்லவை பேசுதல் போன்றவை மேற் கொண்டால் பிறக்கும் குழந்தை அறிவுடையதாக அமையும் என்பர்.

பிரகலாதன் தாய் வயிற்றிலிருக்கும் போதே நாரதர் உபதேசம் கேட்டதும், அபிமன்யு தாய் வயிற்றுள் இருக்கும்போதே போர்க்கள நுட்பங்களை அர்ச்சுனன் வாயிலாகக் கேட்டதையும் இதிகாசங்கள் மூலம் அறிகிறோம்.

இதிகாசம் என்றாலே 'இது இப்படி இருந்தது' என்பதுதானே! இறை நாமங்கள், இறை உருவங்கள் பலவாயினும் ஒன்றையே குறிக்கும் சான்றாக தாய்என்ற சொல்லை ஜனனி, மாதா, சாவித்திரி, தாத்ரி, அம்பாள் எனக் கூறுவர்.

ஜனனீ என்றால் தகப்பனாரால் தன் சரீரத்தில் சேர்க்கப்படத்தக்க கருவாக உயிர் கொடுப்பவள் என்பதாகும். மாதா என்றால் கருவைத்தன்னுள் அடக்கிவைத்து அதை அடை



காப்பவள் என்பதாகும். சாவித்திரி என்றால் கருவாகத் தாங்கியதை வெளியில் வளர்க்கத் தருணம் வந்ததும் வெளியிடுபவள் ஆகும். தாத்ரி என்றால் சிசுவைச் செவ்வனே காத்து வளர்ப்பவளாகும். அம்பாள் என்றால் ஆபத்து நேராது காத்தலும் ஆபத்து வேளையில் தானே வந்து காப்பதுமாகும். தாய் என்றாலோ (தயை) கருணை மிக்கவள் என்பதாகும்.

இவ்வாறு எப்பெயரிட்டு அழைத்தாலும் ஒன்றையே குறிக்கும். அவ்வொன்றே சக்தி. உடலும் ஐவகைச் சக்திகளைக் கொண்டது தானே! இச்சக்தி உயர்வுற மேலும் மேலும் சிறப்புற உணர்வுகளைத் தூண்டுவது பக்தி.

பக்தியை நம்முன்னோர் ஒன்பது வகையாகப் பிரித்தனர். அந்த ஒன்பது வழிகளையும் காண்போம்.

1. ஸ்ரவணம் : இறைநாமத்தைச் சொல்லிக் கொண்டிருப்பது. உறங்கி எழுந்ததும், உண்ணும் முன்பும் பணிகளைத் துவக்குதற்கு முன்னும், ஓய்வு கொள்ளும் போதும் உறங்குதற்கு முன்னும் இறை நாமத்தை உச்சரித்தே எப்பணியும் செய்தல். இறைநாமம் ஒலிக்குமிடத்தில் காதுகளைக் கொடுத்துக் கேட்டல். கண்ணால் கண்டு கருத்தில் இருத்தல். இவையே ஸ்ரவணம் எனப்படும். இதை நமக்கு அனுமான் மூலம் தெரியச் செய்தனர்.

2. கீர்த்தனம்: இறைவனைத் துதிக்கப் பாடல்களை மேற்கொள்ளுதல், பாடல்களை எழுதி இசையோடு பாடுதல். இறைவன் பெருமைகளைப் பலர் அறியச் செய்வித்தல். இதற்குச் சான்றாக வால்மீகி, வேத வியாசர் போன்ற மகான்களைக் கூறலாம். பாட்டால் புகழ்வது கீர்த்தனம்.

3. ஸ்மரணம் : மனதில் எந்தநேரமும் இறையையே நிலைப்படுத்தித் தியானம் செய்தல். வேறு சிந்தனைகட்கு இடம் கொடாது. பரம்பொருள் ஒன்றையே அல்லும் பகலும் ஆராதித்தல். இதற்குச் சான்றாக சீதையைக் கூறலாம். நளாயினி, அருந்ததி போன்ற பலரைச் சொல்ல முடியும். ஓயாது ஜெபித்தல் ஸ்மரணம் எனப்படும்.

4. பாதசேவனம்: திருவடிகளைப் பூசித்தல், திருவடிப் பேறு கிடைக்க இறைவனைப் பணிந்து போற்றுதல். திருவடியே திருஅருள் எனத்தினம் சேவை செய்தல். பரதன், திருவடிகளை பூஜித்து 14 ஆண்டுக் காலம் நாட்டைப் பாதுகைகளே ஆள்வதாக அமைத்த சீரிய செய்கையால் பாதுகா சகஸ்ரமே நமக்குக் கிடைத்தது. திருவடி தொழல் பாதசேவனமாகும்.

5. அர்ச்சனம் : இறையுருவை எதிரில் வைத்தோ, மனத்தில் வைத்தோ மலர்களால், மங்கள நாமங்களால் கூறி வழிபடுதல். இறைவனுக்குகந்ததை இறைவனுக்கென்றே அளித்தல், ஓயாது உச்சரித்து உயர்வு பெறுதல். சபரி இத்தொண்டில் தலைசிறந்த பக்தையாகக் கொள்ளலாம். உருவினை அர்ச்சா மூர்த்தியை வழிபடுவது அர்ச்சனம் ஆகும்.

6. வந்தனம் : கைகளால், உடலால் வணங்கி மகிழ்தல். இறை இதுவெனக் கண்டு

அதனை வணங்குதல். இறையடியவர்களையும் வணங்கி மகிழ்தல். தொழுது துயர் நீக்குதல். இதற்குச் சான்றாக வீடணன் செய்கையைக் கூறலாம். கரங்கூப்பித் தாள் பணிந்து வணங்குதல் வந்தனமாகும். குகனையும் கூறலாம்.

7. தாஸ்யம் : இறைவனுக்காகவே தொண்டாற்றல் இறையுறையுமிடம் தூய்மைப் படுத்தல்-இறைவன் ஏற்குமாறு தன் பணிதனை ஏற்படுத்திக் கொள்ளல். இறை அடியாராகவே வாழ்தல். இதற்குச் சான்றாக இளையபெருமாள் இலக்குவனைக் கூறலாம். தொண்டில் சிறப்பது தாஸ்யமாகும்.

8 சக்யம் : தானும் தொண்டு செய்து தன்னைச் சார்ந்தவர்களையும் தொண்டு செய்ய வைத்தல். இறையடிமையாக தன்னை பாவித்துத் தொண்டு செய்தல். பக்தியைத் தொண்டு மூலம் வெளிப்படுத்தல். தொண்டு இறைவனுக்குரியதாக மட்டுமே-இறை அடியார்கட்குரியதாக மட்டும் அமைய வேண்டும். செய்யும் முறை பற்றி அறியாதவராயினும் ஏற்கப்படும். இதற்குச் சான்றாக சுக்ரீவன் சுட்டிக் காட்டலாம். உண்மைத் தொண்டில் சிறத்தல் சக்யம் ஆகும்.

9. ஆத்ம நிவேதனம் :—எண்ணத்தில் இறையை நிறுத்துதல். நன்மைக்குஇடர்ப்பாடு ஏற்படும்போது தீமையை வீழ்த்த துணிவு கொண்டு போராடி உயிர்த்தியாகமும் செய்தலாகும். இதற்குச் சான்றாக ஜடாயுவைக் கூறலாம். உயிர் தியாகத்தையும் உவந்து செய்தல் ஆத்மநிவேதனம் ஆகும்.

இதில் கூறப்பட்ட வால்மீகி, அனுமன், சீதை, பரதன், சபரி, வீடணன், இலக்குவன், சுக்ரீவன், ஜடாயு போன்ற பக்தர்கள் இராமாயணத்தில் காணக் கூடியவர்கள்தான். ஒரே கதையான ராமகாதையில் உள்ள பாத்திரங்களின் பக்தியில் ஒன்பது வகையும் உள்ளன என்பதற்காகவே சுட்டிக் காட்டப்பட்டது.

இஃதே போல் மகாபாரதம், திருத்தொண்டர் மாக்கதை, திருவிளையாடல் புராணம் போன்ற பலவற்றிலும் நிரம்பக் காண முடியும். மற்ற பக்தி நூல்களைப் படிக்கும்போது அல்லது கேட்கும்போது எவ்வகையான பக்தியில் அமைந்ததெனத் தெரிந்து கொள்ள வாய்ப்பாகவே ஒரே காப்பியத்துள் அமைந்த ஒன்பது வ்கை பக்தி நெறியாளர்களைப் பார்த்தோம்.

செயற்கரிய செய்த பெரியோர்கட்கு உருவச் சிலை அமைத்து அவர் நினைவாக மனத்தில் கொண்டு வணங்கும் கலச்சாரம் அர்ச்சனம் என்ற வகை பக்தியே யாகும். மனிதரிடம் கொள்ளும் பக்தியைப் பரிபூரணனிடம் செலுத்தும் காலத்து மனம் பரிபக்குவமடையும்.

காற்றுள்ளபோதே போற்றிக் கொள்ள வேண்டும். எங்கும் நிறைந்துள்ள காற்று நம் உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாதது. இறையுருவை தியானித்தால், உச்சரித்தால், இறைத்



தொண்டாற்றினால் காற்றின் மூலம் நம் உடல் முழுதும் வியாபிப்பது மட்டுமல்லாமல் எல்லா இடங்களில் பரவிப் பொதுவாழ்வுக்கும் பயனாகின்றது.

வேள்விகளில் உண்டாகும் மந்திர சக்தி மிக்க புகை வாயுவில் கலந்து சுற்றுப்புறச் சூழலில் ஏற்படும் மாசுதனை நீக்குகின்றது. விஞ்ஞானவளர்ச்சிக்கும்ஆன்மீகமெய்ஞ்ஞானம் துணை நிற்பதை மறக்க முடியாது. இறையுறையும் திருக்கோயிலின்கண் மிக முக்கிய மூன்றை தலம், விருட்சம், தீர்த்தம் என்பர். இறையுள்ள இடங்களில் ஏதேனும் ஒரு 'தரு' சிறப்புப் பெற்றிருக்கும். தவிர இறை வழிபாட்டிற்காக நந்தவனம் அமைக்கப்பட்டிருக்கும். இதன் உட்பொருள் காற்று உற்பத்தி செய்வன மரங்கள். மரங்களைப் பேணுதல் நல்ல காற்றை உற்பத்தி செய்வதாகும். மனிதனால் காற்றை உற்பத்தி செய்ய இயலாது. அதன் தன்மைகளைத்தான்பிரித்தறிய முடியும். ஹைட்ரஜன் ஆக்சிஜன் கலவையே நீர், நீரில் வெப்பம் உள்ளது. அதுவே நீர்மின்சாரம் தயாரிப்பாகும். எனவே காற்று தூயதாக அமைந்தால் பரந்தவெளியும் மண்ணும் மண்ணில் விளை பொருள்களும் பெருமை பெறும்.

இதற்கு அடிப்படையான இறையைப் பக்தி செய்து நல்லன நாற்புறமும் பரவச் செய்வித்தலும் பக்திமார்க்கத்துள் ஒன்றுதான். இதுவே தூய தொண்டு. உடல், உள்ளம் தூய்மையோடு சுற்றுப்புறத் தூய்மையும் ஆன்ம பலத்திற்கு அடிகோலும். மரம் வளர்த்தல் பக்தி மார்க்கத்தில் மிகச் சிறந்ததாகும்.

இனி அர்ச்சாமூர்த்திகளை அபிஷேகம் செய்து வழிபடும் தன்மைகளைக் காண்போம்.

(1) நல்லெண்ணை அபிஷேகத்தால் சுக வாழ்வு நீடிக்கும். (2) மரப்பொடியால் (நீரில் கரைத்து)அபிஷேகம் செய்வது கடன்கள் தீரும். (3) நெல்லிப் பொடி (நீரில் கரைத்து) அபிஷேகம் செய்தால் நோய் போக்கும். (4) பஞ்சகவ்யம் மூலம் அபிஷேகம் செய்தால் தூய்மை மிகும். (5) பஞ்சாமிர்த அபிஷேகம் எண்ணிய செயல் வெற்றி பெறச் செய்யும், (6) நெய் அபிஷேகம் வீடுபேறு கிடைக்கும், (7) பாலாபிஷேகம் ஆயுளை வளர்க்கும், (8) தயிர் அபிஷேகம் மக்கட்பேறு ஏற்படுத்தும் (9) தேன் அபிஷேகம்நற்சுகமும் நல்லகுரல் வளமும் தரும். (10) கரும்புச்சாறு அபிஷேகம் பிணிகளை நீக்கும், (11) சர்க்கரை அபிஷேகம் சத்ருவை அழிக்கும். (12) பழவகைகளும் அதன் சாறுகளாலும் அபிஷேகம் செய்ய கோபத்தை நீக்கி குணமதைத்தரும் (13) எலுமிச்சம் பழச்சாறு கொண்டு அபிஷேகம் செய்ய யம பயத்தைப் போக்கும். (14) இளநீரால் அபிஷேகம் செய்ய சுகபோகங்களைத் தரும்.(15)நறுமணச் சந்தன அபிஷேகத்தால் செல்வம் பெருகும். லட்சுமி கடாட்சம் மிகும். (16) அன்னாபிஷேகம் சாம் ராஜ்ய பதவி, பலரும் போற்றும் பெருமை ஏற்படுத்தும்.

இது மட்டுமா? நம் உடலுக்கு நன்மை தருவன எவை என்றும் கூறியுள்ளனர். இளம், வெயில், தூயகாற்று, உடலுழைப்பு, விளையாட்டு, எளிய உடற்பயிற்சி, சத்துள்ள உணவு, போதிய ஓய்வு, மகிழ்வுடன் இருத்தல்.

மேலே கூறியவை மிகக் கடினமானவை அல்லவே! இளம் வெயில் மேனியில் வைட்டமின் 'D'யை இலவசமாகவே அளிக்கிறது. இதைக் கொண்டே சூரிய நமஸ்காரம் ஏற்படுத்தப்பட்டது. தூயக் காற்று பெறவே உலாவி வருதல். பகலில் அவரவர்கட்கேற்ப உடலுழைப்பு உற்சாகமும் ஊக்கமும்தருகிறது. விளையாட்டு, எளிய உடற்பயிற்சிகள் வயதிற்கேற்ப கைக் கொண்டு ஆரோக்கிய வாழ்வுக்குத் தயாராக்குதல். சரீரத்தைச் சீராக வைத்திருக்க முடியும். சீரான சத்துள்ள உணவு குறிப்பிட்ட காலங்களில் உண்ணல். மனித உறுப்புக்களான யந்திரங்கள் ஓய்வு கொள்ள அமைதியான ஓய்வு. என்றும் மனமகிழ்வுடன் இருக்க இறை தியானம் மேற் கொள்ளல்.

இவ்வாறு நம் முன்னோர்கள் உடலைப் பேணுதற்கும் இறையன்பில் ஈடுபட்டு நல்லன நாளும் செய்வதற்குச் எவ்வாறு வாழ்க்கை முறை அமைந்துக் கொள்வதென்றும் நயம் படத் தெரிவித்துள்ளனர். அம்முறைகளில் தெளிவாக்கப்பட்ட நீதிகளை உணர்ந்து செயல் படும் போது நாட்டுக்கும் வீட்டுக்கும் நலம் பயக்கும்.

நிறைவாக திருவிளக்கின் சிறப்பைக் காண் போம். எத்தனையோ நவீன முறைகள் நாட்டில்நிலவியபோதும் மின்விளக்குகள் ஜோடனையில் ஒளிவெள்ளம் பாய்ச்சியபோதும் விழாக்களின் ஆரம்பத்தில் குத்துவிளக்கேற்றி விழாத்



தொடங்குவது மாறாதிருப்பது கண்டு பெருமைப்பட வேண்டும்.

குத்துவிளக்கின் அடியில் தாங்கும் தட்டு சரஸ்வதி பிரம்ம அம்ஸம். நெடுந்தண்டாகிய நடுப்பாகம் லெட்சுமி நாராயண அம்ஸம். நெய் விட்டு திரி உள்ளடக்கிய பாகம் பார்வதி பரமேஸ்வர அம்ஸம். மேலே நீண்டுள்ள பகுதி மகேஸ்வரன் ஆகும். சிகரமாகிய உச்சிப்பகுதி சதாசிவமாகும். திரி பிந்துவாகவும் சுடர் திருமகளாகவும் பிழம்பு, கலைமகளாகவும், தீயானது சக்தியாகவும் உள்ளதென்று ஆன்றோர் கூறினர்.

எல்லா தெய்வசக்தியும் ஒன்றாக திருவிளக்கில் அமைந்துள்ளது. மேலும் சுடர் எரிவதற்கு உறுதுணை காற்று (ஆக்சிஜன்) ஆகும்.

தூய்மைக்கும். சுடர் விட்டு ஜோதி பிரகாசிக்கவும் காற்றுமிக அவசியமானதால், காற்று வடிவில் உடல் முழுதும் இறையருள் பரவியுள்ளதால்,தூய்மையைப் பாதுகாப்பதும், பாதுகாக்கப்பட வேண்டிய காரணமும் புலப்படும்.

உண்மைகளை உணர்ந்து செயல்பட்டால் ஜோதிச் சுடர் மேல் நோக்கி எரிந்து ஒளி வெள்ளம் பாய்ச்சுவது போல வாழ்க்கையில் சுற்றுச் சூழல் உயர்வும் பிரகாசமான செயல் பாடுகளும் அமையும் என்பது உறுதி.

ஏதேனும் ஒரு நிலையில் பக்தி செலுத்தி இறையருள் இனிதேகூட நாட்டு நலன் நிறையும் கூட்டு வாழ்க்கை குதூகலிக்கும். கொள்கை மணம் பரப்பும்.

# "நீதியே"

சேது. சிவா, மேலாளும் அறங்காவலர்,
அருள்மிகு மாணிக்கவாசகர் ஆலயம், சின்னமனூர்.

'அறத்திற்கு அழிவில்லை' என்றும், 'நீதி சாவதில்லை' என்றும் அறத்தின் நிலையான தன்மையைக்-காரணத்தினை அறிந்தோ, அறியாமலோ மக்கள் பேச்சு வழக்கில் பேசி வருகின்றனர்.

புராணங்களில் அறம் அழிவதில்லை என்பதற்கு வரலாறு ஒன்று கூறப்படுகின்றது.

ஒரு பேரூழியில் தோன்றியபடியே ஒன்றில் ஒன்று ஒடுங்கிக் கொண்டே வரும்பொழுது சகல அறங்களுக்கும் அதிதேவதையான அறத் திருவுரு, ஒரு காளை வடிவம் கொண்டு, சிவ பெருமானை அடைந்து, 'பெருமானே'! அனைத்தும் ஒன்றோடு ஒன்று ஒடுங்கி அழிந்து வருகின்றன; இறுதியில் இருப்பவர் தாங்கள் ஒருவரே. ஊழியில் நான் அழிந்து விடாமல், தங்களைச் சுமந்து கொண்டிருக்கும் பேற்றினை எனக்கு அருள வேண்டும்'' என்று வேண்டியது.

இறைவன் அதனை 'அஞ்சேல்' என்று அபயமளித்து, அதன் தலைமீது தம் திருக்கரத்தை வைத்து, 'நீ விரும்பியபடி ஆகுக; யாம் நின்னை நீங்கோம்'; நீ எமக்கு வாகனமாக இருக்கக் கடவை' என்று அருள் செய்தார்.

பேரூழியின் முடிவில் எஞ்சி இருப்பவர்கள் இறைவனும் அறவிடையும்தான். எல்லாம் அழிந்த நிலையிலும், அறம் அழியாமல் இறைவனைச் சுமந்துகொண்டிருக்கும். இதிலிருந்து அறம் அழிவதில்லைஎன்பதுஉறுதிப்படுகின்றது.

சைவ சமய குரவர்கள் இறைவனை 'அறனே' என்றும், 'அற வடிவானவனே' என்றும் பாடுவதுடன் 'நீதியே' என்றும் சிறப்பித்துப் பாடுகின்றார்கள். திருஞானசம்பந்தர்

''நீதி நின்னை அல்லால் நெறியாதும் நினைந்தறியேன்' என்றும், திருநாவுக்கரசர்

''ஆதியான் அண்ட வாணர்க்கு அருள்
நல்கும் நீதியான்''

''நெய்யாடி நின்மலனே நீலகண்டா
நிறைவுடையாய் மறைவல்லாய் நீதியானே''

''ஆதியானை அமரர் தொழப்படும்
நீதியானை''

என்றும் பாடுகின்றார்கள்.

அறவாழி சிவமாகிய மாணிக்கவாசகர் தாம் திருவாய் மலர்ந்தருளிய திருவாசகம் அருட்பத்து, 'சோதியே சுடரே' என்ற முதலாவது பாடலில் 'நீதியே' என்று ஆதியை அழைக்கின்றார்.

மாணிக்கவாசகரின் வாழ்க்கையில் இறைவன் எவ்வாறு நீதியானவனாகத் திருவிளையாடல் புரிந்தார் என்பதனைச் சிந்திப்போம்.

திருவாதவூரினில் திருவவதாரம் செய்து பதினாறு ஆண்டு அகவைக்குள் அறுபத்து நான்கு கலைகளையும் கற்று அரிமர்த்தன பாண்டியனால் முதலமைச்சராக அமர்த்தப் பெற்று, அரசுப் பணிகள் ஆற்றி வரும்பொழுது கீழைக் கடலோரத்தில் வந்திறங்கியுள்ள குதிரைகளை வாங்கி வர மன்னன் ஆணையிட கருவூலத்திலிருந்து பொன்னும் மணிகளும் எடுத்துக் கொண்டு செல்லும் வழியில், திருப்பெருந்துறையில் இறைவன் குருந்த மரத்தின் அடியில் குருமூர்த்தமாக எழுந்தருளியிருக்க, அவரிடம் உள்ளத்தைப் பறிகொடுத்து, அன்பு கொண்டு, ஆட்கொள்ள வேண்டும் என்று வேண்டிட, குருநாதர் தம் கண்ணினால், அருள் நோக்கம் செய்யவும், ஐந்தெழுத்து உபதேசம் செய்யவும், தம் திருவடிகளைத் தலையின் மீது வைக்கப் பெற்றும், தீட்சை பெற்றார்.

வாதவூரர் தன்னுடைய உடல், பொருள், ஆவி அனைத்தையும் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று கூறித் தான் அணிந்திருந்த அணிகலன்களையும், பாண்டியனின் பொருள்களையும்குருநாதர் திருமுன்பு வைத்து வேண்டினார். நீதி சேர்ந்த இறைவனும் முகம் மலர்ச்சி கொண்டார் என்று திருவாதவூரடிகள் புராணத்தில், திருப்பெருந்துறைச் சருக்கத்தில் கடவுள் மாமுனிவர் பாடுகின்றார்.

''என்ன வாகமுன் நினைந்துள பொருளும்
இல்லதாகிய உடலமும் யானும்
நின்ன வாக நின்னருள் கொடுநினைந்தேன்
நின்மலா வென நின்று நின்று உரையா
மன்னு தானைதம் மேலணி கலன்கள்
மதுரை மீனவன் வான்பொருள் இறையோன்
முன்ன தாக வைத்து இறைஞ்சினார் அறம்சேர்
முதல்வனார் முகமலர்வு கொண்டிருந்தார்.''

வாதவூரர் குருகாணிக்கையாகப் பாண்டியனின் பொருளைத் தம் திருமுன்பு வைத்த பொழுது, குருநாதர் அதனை மறுத்து, 'இது



மன்னன் பொருள், அவனிடம் சேர்ப்பித்து விடு' என்றோ; அல்லது 'மன்னன் கூறியபடி, இப் பொருளைக் கொண்டு குதிரைகள் வாங்கி விடு' என்றோ கூறியிருக்க வேண்டும். அவர் அவ் வாறு கூறவில்லை. என்ன கூறினார்?

தம் அருளைப் பெற்று அடியவராகியும், தம்மால் மேன்மை அடைந்தவருமாகிய வாத வூரரின் முகத்தினைப் பார்த்து, 'இந்த நற் பொருளை எல்லாம் திருப்பணிக்குக் கொடு ; மேன்மையான அரிய தவசிகளுக்குக் கொடு; இல்லாமல் துன்பப்படுபவர்களுக்குக் கொடு'' என்று கூறியதாகக் கடவுள் மாமுனிவர் பாடு கின்றார்.

''பெருந்துறை உறைவார் அன்பு பெறும்
திருஅடியர் ஆகி
இருந்தனர் தம்மின் மேன்மை எய்தினர்
முகத்தை நோக்கித்
திருந்திய பொருளீது எல்லாம் திருப்பணிக்கு
அளியும் மேலாம்
அருந்தவர்க்கு உதவும் இல்லாது அலந்தவர்க்கு
அருளும் என்றார்''

நடைமுறையில் உள்ள குற்றவியல் சட்டம் குற்றம் செய்தவன் குற்றவாளி ( Accused ) குற்றம் செய்யத் தூண்டியவன் பகுதி குற்றவாளி ( Quasi Accused ) என்று கூறு கின்றது.

அரசன் பொருளைக் குறிப்பிடப்பட்ட காரியத்திற்குப் பயன்படுத்தாமல், வேறு வகையில் செலவு செய்த வாதவூரர் குற்றவாளி என்றும், அப்பொருளை எல்லாம் மாற்று வகைகளில் செலவு செய்யத் தூண்டிய பெருந் துறைக் குருநாதர் பகுதி குற்றவாளி என்றும் நினைக்கத் தோன்றுகின்றது. இது முதலாவது வாதம்.

அடுத்து, பெருந்துறைப் பிரானால் வேறு ஒரு செயலும் செய்யப்படுகின்றது. தம் அடியவ னுக்காக நரிகளைப் பரிகளாக்கி மன்னனிடம் ஒப்படைத்தது.

மன்னனின் பொருளை அவன் சொற்படி குதிரைகளுக்காகச் செலவு செய்யாமல், வேறு வகைகளில் செலவு செய்யத் தூண்டியதுடன் அல்லாமல், காட்டில் திரிகின்ற நரிகளைப் பரி களாக மாற்றி மன்னனிடம் சேர்ப்பித்தது. ஒரு பெரிய ஏமாற்று ( Cheating ) வேலையாகும். இது இரண்டாவது வாதம். இந்த இரண்டு வாதங்களும் இந்த அளவில் நிற்க;

மன்னனிடம் ஒப்படைக்கப் பெற்ற பரிகள் எல்லாம் அன்றிரவு நரிகளாகி அனைவருக்கும் துன்பத்தைச் செய்து மறைந்துவிட, வெகுண்ட மன்னன், வாதவூரரை வைகையாற்றின் சுடு மணலில் நிறுத்தித் தலையில் கல் ஏற்றிக்கிட்டி யிட்டுத் தண்டனை செய்விக்க, தம் அடியவ னின் துன்பத்தைப் பொறுக்க முடியாமல், இறைவன் வைகையாற்றில் வெள்ளப் பெருக்கு ஏற்படச் செய்தார். வெள்ளம் கரைகளை உடைத்துக் கொண்டு நகருக்குள் புக, வீடு தவறாமல் ஆட்கள் வந்து உடைப்பினை

அடைக்க வேண்டும் என்று பறைசாற்றி அறிவிக்கப்பட்டது.

மதுரை நகரில் வயதில் முதிர்ந்த, ஆயிரம் பிறை கண்ட, செம்மனச் செல்வியாகிய வந்தி எனும் மூதாட்டி இருந்தாள். அவளுக்கு உற்றார் உறவினர் கிடையாது. பிட்டு விற்றுப் பிழைப்பு நடத்துகின்றவள், அவள் பங்கிற்கும் உடைப்பு அடைப்பதற்குஅளந்துவிடப்பட்டது. ஊரே திரண்டு அவரவர்கள் பங்கினை அடைத்துக் கொண்டிருக்கும் பொழுது, இந்த மூதாட்டிக்கு யார் வேலைக்கு வர இருக்கின்றார்கள்! தன் பங்கினை அடைக்க ஆள் கிடைக்கவில்லையே என்று அவள் சோமசுந்தரப் பெருமானிடம் முறையிட்டாள். அவ்அளவில் துயர் தீர்க்கத் திருவுள்ளம் கொண்ட ஆலவாய் அண்ணல் ஓர் கூடையைத் தலையில் கவிழ்த்துக் கொண்டும், மண் வெட்டியைத் தோளில் தாங்கிக் கொண்டும், 'என்னைக் கூலி கொடுத்து வேலை கொள்வாருண்டோ!' என்று கூறிக் கொண்டே மூதாட்டி முன் வந்தார். அவள் தன் பங்கினை அடைக்குமாறு கூற, 'கூலி என்ன தருவாய்? என்று அவர் கேட்க; தன்னிடம் உள்ள பிட்டினை விற்றுக் கூலி கொடுப்பதாகக் கூறினாள்.

தான் அதிகமான பசியினால் களைத்து விட்டதாகவும், உதிர்ந்த பிட்டினை முன் கூலியாகக் கொடுத்தால் உண்டு களைப்பாறிப் பின் பங்கினை அடைப்பதாகக் கூறிப் பிட்டினை வாங்கி உண்டு, மேலும் கொஞ்சம் பிட்டினை தம் ஆடையில் முடிந்து கொண்டு, கரை அடைப்பு வேலையைக் கண்காணிக்கும் அலுவலர்களிடம் தாம் வந்தியின் கூலியாள் என்று பதிவு செய்துவிட்டு, உடைப்பு அடைக்கும் இடத்திற்குச் சென்று, ஒரு கூடை மண் எடுத்து வேறு இடத்தில் கொட்டுவார்; ஆடுவார், பாடுவார், ஓடுவார், சிரிப்பார், மடியிலிருந்து பிட்டினை எடுத்துத் தின்றுவிட்டு, 'பிட்டு நன்று நன்று' என்று கூறுவார், வேடிக்கை செய்வார், மற்றவர்கள் அடைத்த கரையையும் உடைப்பார்; மறுபடியும் மண் எடுப்பார், மற்றோர் இடத்தில் கொட்டுவார். இப்படியே வந்தி பங்குக் கரையை அடைக்காமல் திருவிளையாடல் செய்துவிட்டு, வேலை செய்து களைத்தவர் போல் ஒரு மரத்தினடியில் உறங்குவார் போன்று சாய்ந்து கிடந்தார்.

ஒரு வேலையை முடித்துத் தருவதாகக் கூறி முன்பணம் பெற்றுக் கொண்டு, அந்த வேலையை முடிக்காமல் இருப்பது முறையல்ல; உடைப்பினை அடைக்கின்றேன்என்று உதிர்ந்த பிட்டினை முன் கூலியாகப் பெற்றுஉண்டுவிட்டு உடைப்பு அடைக்காமல் வேடிக்கை, விளையாட்டு காட்டிவிட்டு ஓய்வு கொள்வது என்பது நீதி அல்ல, இது மூன்றாவது வாதம்.

உடைப்பு ஏற்பட்ட கரை முழுவதும் அடைக்கப்பட்டுவிட்டனவா என்று பார்வையிட மன்னன் வந்தான். வந்தியின் பங்கு அடைக்கப்படாமல் இருப்பதனைப் பார்த்து, இந்த இடம் ஏன் அடைக்கப்படவில்லை என்று கேட்க, 'வந்தி எனும் மூதாட்டிக்கு அளந்து விடப்பட்ட பங்கு என்றும், வந்தியின் ஆள் என்று ஒருவன் தன்னைப் பதிவு செய்துவிட்டு, கரையை அடைக்காமல் வேடிக்கை, விளையாட்டு காட்டிவிட்டு, அதோ அங்கு மரத்தடியில் உறங்குகின்றார்' என்று கூறினார்கள். அவனைக் கொண்டு வாருங்கள் என்று மன்னன் கூற, வேலை ஆட்கள் சென்று கூலியாளாகிய இறைவனை இழுத்து வந்து மன்னன் முன் நிறுத்தினார்கள்.

மன்னன் கோபங்கொண்டு கைப்பொற்பிரம்பினால் கூலியாளின் முதுகில் வீசி அடித்தான்,

'கண்டனன் கனன்று வேந்தன் கையிற்
பொற்பிரம்பு வாங்கி
அண்டமும் அளவிலாத உயிர்களும் ஆகம் ஆகக்
கொண்டவன் முதுகில் வீசிப் புடைத்தனன்''

மன்னனின் பிரம்படி தம்மீது பட்டவுடன் எங்கும் நிறைந்த இறைவன் கூடையுடன், மண்ணை உடைப்பில் கொட்டிவிட்டு மறைந்து விட்டார்.

'' ................................ கூடையோடு
மண்தனை உடைப்பிற் கொட்டி மறைந்தனன்
நிறைந்த சோதி'',

மேற்கூறிய மூன்று வாதங்களுக்கும் உரிய சமாதானத்தை ஆண்டவன் அசரீரியாக மன்னனுக்குக் கூறியதாகப் பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற்புராணம். மண் சுமந்த படலத்தில் பாடுகின்றார்.

கொடுங் கோலின்றி செங்கோல் செலுத்தும் பாண்டியனே! உன் பொருள் எல்லாம் அறத்தின்படி தேடப்பட்டதனால், தூய்மையானவை; அவை நமக்கும், நம் அடியவருக்கும் நம் மீதுள்ள அன்பின் மிகுதியினால் வாதவூரனால் கொடுக்கப்பெற்றன.

'மறத்தாறு கடந்த செங்கோல் வழுதிநின்
பொருள்கள் எல்லாம்
அறத்தாற்றில் ஈட்டப்பட்ட அனையவை
புனிதமான
திறத்தாலே நமக்கும் நம்மைச் சேர்ந்தவர்
தமக்கும் ஆர்வம்
உறத்தாவில் வாதவூரன் உதவினான்
ஆதலாலே''.

அவனை நீ தண்டனை செய்தாய், பிணம் தின்னும் வாயினையுடைய காட்டில் உள்ள நரிகளைப் பரிகளாக்கித் தந்தோம்; அவை இரவோடிரவாக மறைந்து போயின; நீ மேலும் அவனுக்குத் துன்பத்தினைக் கொடுத்தாய்; நம்மால் அது பொறுக்கமுடியவில்லை.

'அனையனை மறுக்கம் செய்தாய் அரும்பிணப்
புலவுத் தீவாய்
வனநரித் திரளை ஈட்டி வாம்பரி ஆக்கித்
தந்தேம்
கனையிருட் கங்குல் போதில் கழிந்தனபின்னும்
தண்ட
வினையர் பால்விடுத்துத் துன்பம் விளைத்தவை
அதுபொறாதேம்'',



வெள்ளம் பெருகிடச் செய்தோம்; வந்தியிடம் பிட்டு வாங்கி உண்டு, பிரம்படிபட்டு, மண் போட்டுக் கரையை உயரச் செய்து, தாயைப் போன்ற வந்தியின் பிறப்புத் துன்பம் நீக்கி, எம்முடைய சிவலோகம் அடையச் செய்தோம்.

''வரும்புனல் பெருகப் பார்த்தேம் வந்தி
கைப்பிட்டு வாங்கிப்
பருகி வந்துஆளாய் மாறுபட்டன மண்
போகட்டுப்
பெருகரை உயரச் செய்துபோகி அவ்வன்னை
போல்வாள்
பெருகிய இடும்பை தீர்த்துஎம் பேருலகு
அடையச் செய்தேம்''

அரசனுடைய பொருளை அரனுக்கும், அடியார்களுக்கும் அற்றவர்களுக்கும் கொடுத்த குற்றத்திற்காக, வாதவூரர் அரசனால் பலவகைகளிலும் தண்டனை கொடுக்கப் பெற்று அனுபவித்து விட்டார்.

குருநாதராகிய தம்மால் தூண்டப்பெற்று மாற்று வகைகளில் செலவு செய்யப்பட்ட பொருளுக்கு உரிமையுடையவனும் நரிகளை எல்லாம் பரிகளாக மாற்றிக் கொடுத்துத் தம்மால் ஏமாற்றப்பட்டவனுமாகிய அரிமர்த்தன பாண்டியனிடமே, அவனின் கைப்படப் பிரம்படியைத் தண்டனையாக வலிய ஏற்றுக்கொண்டார் என்பதனையும்,

வந்தியிடம் முன் கூலியாகப் பெற்று உண்ட பிட்டிற்காக ஒப்புக் கொண்ட பணியை பிரம்படிப்பட்டு மறையும் பொழுது, உடைப்பினை அடைத்துவிட்டு மறைந்துள்ளார் என்பதனையும் சிந்தனை செய்து சமாதானம் அடைந்து,

அறத்தை வாகனமாகவுடைய, அறம் தவறாத நீதியானவன் என்பதை இறைவன் மெய்ப்பித்துவிட்டார் என்று புரிந்து, விளங்கித் தெளிவு பெற்று; 'நீதியே' என்று சைவ சமய குரவர்கள் பாடியுள்ளதின் நுட்பத்தினை அறிந்து கொள்ள முடிகின்றது.

---

**வேண்டத் தக்க தறிவோய்நீ**
**வேண்ட முழுதும் தருவோய்நீ**
**வேண்டும் மாலயற்கரியோய்நீ**
**வேண்டி என்னைப் பணிகொண்டாய்**
**வேண்டி நீயா தருள்செய்தாய்**
**யானும் அதுவே வேண்டினல்லால்**
**வேண்டும் பரிசொன் றுண்டென்னில்**
**அதுவும் உன்தன் விருப்பன்றே!**

**—மாணிக்கவாசகர்**

# இடர்களையும் பிள்ளையார் திருப்பள்ளி எழுச்சி

அறநெறியண்ணல் கி. பழனியப்பனார் மதுரை.

[குறிப்பு : பிள்ளையார்க்கெனத் திருப்பள்ளி எழுச்சி இதுகாறும் எவரும் பாடவில்லை. இதுவே முதலாவது. பிள்ளையாரின் திரு விளையாடல் முழுதும் இதில் சொல்லப் பட்டுள்ளது. மேலும் 'சுப்பிரபாதப் பண்ணிலும் இசைக்கலாம்.]

### காப்பு

திருப்பள் ளிஎழுச்சி சீராய்த் திகழக்
கருணைக் கணபதியே காப்பு.

### எழுந்தருள்வாயே!

(நிலமண்டில ஆசிரியப்பா)

உலகம் வலம்வரும் ஞாயிறு உவப்ப
உலகை வலம்வரும் திங்களும் உவப்ப
அத்தனும் மகிழ அன்னையும் மகிழ
உத்தமத் தம்பி உவகை கொள்ள
மாலும் அயனும் மற்றும் வானோர்
நாளும் நன்றி மறவா திருக்கத்
திருமலர்ப் பாதச் சிலம்பொலி முழங்க
வருகை தருக வாரண முகனே!
குயிலும் பாடிச் சேவலும் கூவி
வெயிலோன் பொன்னொளி வீசும் நேரம்
கருணை பொழியத் தருணம் இதுவே!
குருவாய் வருவாய் அருள்வாய் ஐயனே!

### முடிப்பு

பிள்ளையா ரப்பா! பிள்ளையா ரப்பா!
எழுந்தருள் வாயே! எழுந்தருள் வாயே
(எண்சீர்க்கண்ணிகள்)

ஓங்காரப் பிரணவமாய் உருக்கொண்ட சிவசத்தி
உவந்ததனால் யானைமுக உத்தமனாய்த்
தோன்றியவா!
வீங்குபுகழ் மண்ணவரும் விண்ணவரும்
யாவருமே
வினைசெய்முன் உனைவணங்கின் இடர்நீக்க
தோன்றியவா!
(பிள்ளையாரப்பா)

3. ஓங்காரன் எனப்போற்றும் ஒளிமயனே!
அரன்மகனே!
உலகோரின் துயரங்கள் அத்தனையும்
ஒழிப்பவனே!
பாங்காக அங்கங்கே பலர்காண அமர்ந்தவுனை
பார்த்தவுடன் கைகூப்பிப் பாமரரும்
வணங்குவரே!
(பிள்ளையாரப்பா)

4. கணபதியாய் வல்லசுரன் கயமுகனை
வென்றவனைக்
கருணையுடன் மூசிகவா கனமாக்கிக்
கொண்டவனே!
கணங்களுடன் மூர்த்திமூவர் கவலைகளைத்
தீர்த்ததனால்
காலமெலாம் போட்டதோப்புக் கரணமுமக்
காக்கினரே!
(பிள்ளையாரப்பா)

5. ஐங்கரனே! முதல்வன்போல் ஐந்தொழி
லும் செயவல்லோய்!
அகத்தியனார் கமண்டலத்தைக் காகமாகிக்
கவிழ்த்தவரே!
கங்கையாள் காவிரியாய்ப் பெருக்கெடுத்துக்
குன்றாநெற்
களஞ்சியமாய்ச் சோழநாட்டை ஆக்கிமகிழ்
கணபதியே!
(பிள்ளையாரப்பா)

திரிபுரத்தை எரித்திடவே சிவனார்க்குத்
தேரொன்றைச்
செய்தவர்கள் உனைமறந்து செய்திடவே,
புன்னகைத்து
விரிசடையான் அதிலேறும் வேளையதன்
அச்சிற்று
விழச்செய்தே விண்ணவர்க்கு நற்புத்தி
புகட்டியவா!
(பிள்ளையாரப்பா)



திருநாரை நம்பியாண்டான் திருப்படைப்பை
உணவேண்டச்
சீராக அதையுண்ட திருப்பொல்லாப்
பிள்ளையாரே!
திருமுறைகள் மறைவிடத்தைத் தெளிவாகக்
கூறவேண்ட
தில்லைதனில் இருக்குமிடம் இதுவென்று
கூறியவா!
(பிள்ளையாரப்பா)

அண்டமெலாம் வலம்வரவே அரன்வைத்த
போட்டிதனில்
அவ்வரனை வலம்வந்தே மயிலோனை
வென்றவனே!
தொண்டரெலாம் தேவர்போல் தோப்புக்க
ரணமிட்டே
தொழுவாரேல் என்றென்றும் துணைநின்று
காப்பவனே!
(பிள்ளையாரப்பா)

குறமகளாம் வள்ளியம்மை குகன்தனையே
மணம்புரியக்
குஞ்சரமாய்த் தம்பிக்குத் துணைநின்ற
தூயவனே!
அறம்பொருள் இன்பம்வீடு நான்கினையும்
நல்கிடவே
ஆலயங்கள் அனைத்துள்ளும் முதலிடத்தில்
அமர்ந்தவனே!
(பிள்ளையாரப்பா)

பாரதத்தை வியாசமுனி பாடிடவே மாமேரு
பருவதத்தில் வலக் கொம்பால் பார்புகழப்
பொறித்தவனே!

ஆரமுதாம் மூதாட்டி அவ்வையாரின் சற்குருவே
அவரகவல் கேட்டுவந்து அரன்திருமுன்
சேர்த்தவனே!
(பிள்ளையாரப்பா)
வேதநெறி விரிவுரையில் மனங்கொள்ளாப்
பார்வதியை
விரிசடையான் சபித்திடவே மிகவருந்தி மன
நொந்தாய்!
வேதங்கள் அனைத்தையுமே ஆழ்கடலில்
விட்டெறிந்து
மீட்டிடஅச் சிவன்தனையே மீனவனாய்
வரச் செய்தோய்!
(பிள்ளையாரப்பா)

தக்கன்செய் வேள்வியினைத் தகர்த்தவீர
பத்திரரின்
தலைமாலைத் தலையொன்று திருநெடுமால்
சுற்றிவிட்ட
சக்கரத்தைக் கௌவிடவே அதைமீட்க மாலு
முனைச்
சரணடைய விகடக்கூத் தாடச்செய்
தவிகடனே!
(பிள்ளையாரப்பா)

ஒளிப்பிழம்பில் உருவெடுத்து வேகவதி
தென்கரையில்
உவந்திருக்கும் பரிபூர ணத்தேவே!
உனதருளால்
தெளிந்தஞானி இரெட்டிபட்டி குருநாதர்
தேர்ந்தவழி
தேர்ந்தோர்க்கு என்றென்றும் அருள்புரியும்
தேவதேவே!
(பிள்ளையாரப்பா)

வாக்கினொடு நல்மனமும் உண்டாகும்
மாமலராள்
மான்விழியால் செல்வமுண்டாம். நோயற்ற
வாழ்வுண்டாம்
மாக்கருணை வள்ளல்தம் திருநோக்கால்
என்றறிந்தோர்
வந்துள்ளார் அடிபணிய வாழ்முதலே!
வாரணனே!
(பிள்ளையாரப்பா)



வெவ்வினையை வேரறுக்க வல்லவனே!
வேட்கைதனை
விட்டொழிக்கச் செய்பவனே! விண்ணவரும்
மண்ணவரும்
எவ்வினையைத் தொடங்குமுன்னர் இடர்
களைய உனைவேண்ட
இங்குவரல் வழக்கமன்றோ! ஆனைமுக
ஐங்கரனே!
(பிள்ளையாரப்பா)

முப்பழமும் இளநீரும் எள்ளுருண்டை
பொரியவலும்
மோதகமும் பருப்புவகைச் சுண்டலுடன்
பாயசமும்
அப்பமுடன் சர்க்கரையும் அத்தனையும்
படைத்துள்ளோம்
ஆனைமுகா! அதையேற்று அருள்புரிய
வேண்டுதுமே!
(பிள்ளையாரப்பா)

## உயிரெழுத்து அருச்சனை

அன்பர்தம் அன்பே போற்றி! போற்றி!
ஆன்றோர்கள் அறிவே போற்றி! போற்றி!
இடர்களுக்கு இடரே போற்றி! போற்றி!
ஈவோரின் ஈகையே போற்றி! போற்றி!
உயிருக்கு உயிரே போற்றி! போற்றி!
ஊழ்வினையை அறுப்போய் போற்றி! போற்றி!
எங்கெங்கும் இருப்போய் போற்றி! போற்றி!
எங்குளோர்க்கும் எளியோய் போற்றி! போற்றி!
ஐந்தொழில்கள் ஆற்றுவோய் போற்றி! போற்றி!
ஒன்றேயாம் ஒன்றே போற்றி! போற்றி!
ஓங்கார உருவனே போற்றி! போற்றி!
ஔவைக்கு அமுதனே போற்றி! போற்றி!



எங்கும் அறநெறி ஆட்சி நடக்கவும்
மங்கலம் பொங்கி மக்கள் மகிழவும்
அருள்புரிவாயே! அருள்புரிவாயே!
பிள்ளையாரப்பா! பிள்ளையாரப்பா!

சரணம்! சரணம்! சரணம்!

# ஒன்று நீ, ஒன்றே ஒன்று

தத்துவக் கவிஞர் முருகுவண்ணன்

### குறள் வெண்பா

அறியவொணா ஒன்றை அறிந்தாற்போல்பாடும்
திறனருள்வாய் வாய்த்தமிழே தேர்ந்து.

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

ஒன்றுநீ, இரண்டாய் மூன்றாய்;
ஒன்றிலே மூன்றாய்; மூன்றும்
ஒன்றதாய் ஆன ஒன்றே!
அருவமாய் ஒருமை யான
ஒன்றுநீ! காணத் தக்க
உருவினால் பன்மை யான
ஒன்றுநீ! இருமை—மும்மை—
பன்மையின் எண்ணே! ஒன்றே!.

ஒன்றும்நீ! திரிபும்நீ! எம்
உயிர்மெயும், உணர்வும் நீயே!
தொன்றுதொட் டின்றும் என்றும்
தொடர்ந்திடும் காலம் நீயே!
'சின்' முதல் அண்டம் ஈறாய்த்
திகழ்வதும் நீயே! ஒன்றோ(டு)
ஒன்றுசேர் தொடர்பும்—மீளாத்-
தளையுடன் உறவும் நீயே!

ஒன்றினுள் அடங்கும் ஒன்றே!
ஒன்றிலும் அடங்கா ஒன்றே!
ஒன்றினுள் அடங்கி உள்ளுள்
உள்ளதோர் ஒன்றின் ஒன்றே!
ஒன்றுபல் கோடி எண்ணோ(டு)
எழுத்தெல்லாம் கடந்த ஒன்றே!
ஒன்றுநீ, ஒன்றும் இல்லா
ஒன்றான ஒன்றே! ஒன்றே!

ஒன்றுமே இல்லா ஒன்றில்
உறும்உரு எண்ணில் ஆக்கும்
ஒன்றுநீ! பிறப்பி றப்பில்
ஒன்றுநீ! உவமை—ஒப்பில்
ஒன்றுநீ! இல்லா ஒன்றில்
உளதெலாம் படைத்த ளித்தே
ஒன்றுளே ஒடுங்கும் நீ, 'அந்—
தாதி' 'தான்' 'தான்' ஆம் ஒன்றே!

''ஒன்று'' ''ஒன்(று)'' என்றே சொல்லும்
மறைஒலி—ஒளியே! ஒன்றாய்
ஒன்றிடில் நிலைத்த வீடு
பேற்றினைத் தரும்நீ ஒன்றே!
மன்னுயிர்ப் பிறப்பே மாகி
மற்றெலாப் பொருளு மாகி
நின்றசெம் பொருளே! எல்லா
நிலையும் கடந்த ஒன்றே!

ஒன்றுநீ ஆன போதும்
ஒன்றுமற் றொன்றாய்ப் பல்கி
மன்னுமெய்த் தோற்ற மாகி
வயங்கியும் மறைத லும்நீ!
உன்றனுள் அடங்கும் யாவும்!
அனைத்துளும் அடங்கும் நீயோர்
ஒன்(று); உயிர்; மெய்; சார்(பு); ஒற்றை;
உள்-புறம் எனும்இ ரட்டை!

ஒன்றுபோல் மறைக ளெல்லாம்
உண்டொரு கடவுள் என்னும்
ஒன்றான கடவுள் சொற்குத்
தரும்உரை—பொருளைக் காணின்
''ஒன்று'' ; தான்''; உள்ள உள்ள
உண்டெனும் இறை; தெய் வம்நீ!
'என்றும்' 'எங்'(கு) 'எங்கும்' 'எல்லாம்'
எனும்கட வுள்நீ ஒன்றே!

இல்லாத ஒன்றே போலும்
இருந்தியல் ஒன்றே! ''யாவும்
இல்லாத ஒன்றில் தோன்றி
இருந்து, பின் மறைதல் எல்லாம்
வல்லபேராற்றல் ஒன்றால்!''
என்றெமக் குணர்த்தும் வாய்ப்பாய்,
பல்வினா விடைஒன் றாகிப்
புலப்படும் பற்றுக் கோடே'.

ஒளியாண்டு கோடி கோடிக் (கு)
அப்பாலும் உறும்பிண் டாண்டம்;
வளி; மண்; தீ; நீர்; வான்—ஒரைம்-
பூதம்; ஐம் பொறி; பு லன்கள்;
அளவை; மெய் யறி(வு); எண் ணில்லா
கலை; அறி வியல்; மெய்; ஆவி;
விளங்குபே ரருள்; அன் பெல்லாம்
விளங்கிட விளங்கும் ஒன்றே!

''இல்லை'' ''உண்''(டு) என்பார்க் கேற்ப
இல்லைபோன்ம் உள்ள ஒன்றே!
நல்லதோர் அன்பால் வந்த
மானிடத்(து) அகம்பு றத்தின்
பல்வேறு புலன்கள் காணாப்
பழம்புதுப் பொருளே! ஒன்றே!
'சில்'லினும் சிறியேன் செய்யுள்
திருவரி வடிவே! ஒன்றே!

''ஒன்றான என்னோ டொன்(று)'' என்(று)
உரைக்காமல் உணர்த்தும் ஒன்றே!
ஒன்றுனைக் காணும் நுண்மாண்
நுழைபுலம் உதவ வல்லார்
இன்றில்லை! இரங்கி நீயே
எமக்குனைக் காட்டித் தந்தால்
ஒன்றிவாழ்ந் துய்வோம்! ஈதெம்
உயிர்மெயாம் தமிழ்மேல் ஆணை!

எல்லரும் இன்பாய் வாழ;
என்எழுத் துயிர்மெய் என்பும்
நல்குமோர் அன்பு வாழ்வும்;
தாய்மொழி—நாடு—வையம்
பல்லுயிர் ஓங்கி வாழப்
பண்பொடு செய்யும் தொண்டால்
வல்லஒன் றுனைக்கண் டின்பாய்
வாழ்ந்துய்ய அருள்க ஒன்றே!

# அருள்மிகு திருமலைக் குமாரசுவாமிக் கோயில்

பைம்பொழில் கே. பாலசுப்பிரமணியன், எம்.ஏ.பி.எல்., பி.எட்.,

**இருப்பிடம்**

குன்றுதோறாடும் குமரன் குடியிருக்கும் எழில் மலைகளில் ஒன்று திருமலை. நெல்லை கட்டபொம்மன் மாவட்டம் தென்காசித் தாலூகாவில் உள்ள சிறிய கிராமம் பைம்பொழில். தென்காசி புகைவண்டி நிலையத்திலிருந்து சுமார் 10கி.மீ.தொலைவிலும், செங்கோட்டை புகை வண்டி நிலையத்திலிருந்து சுமார் 5 கி.மீ. தொலைவிலும் அமைந்துள்ளது. இத்தலம். தென்றல் தவழ்ந்து விளையாடும் மேற்குத் தொடர்ச்சி மலையில் அமைந்துள்ள கரும் பாறையிலான அழகிய குன்று இது. சுமார் அறுபது ஏக்கர் பரப்பளவுள்ள பெரிய மலை மீது தெய்வசிகாமணியான முருகன் பாலமுருகனாகி அமர்ந்திருக்கின்றான். வண்டினங்கள் பாட்டிசைக்கும், வண்ண மயில்கள் தோகை விரித்தாடும் சிங்காரச் சோலைகள் சூழ்ந்த பைம்பொழில் கிராமத்திற்கு மேற்கே 2 கி.மீட்டர் தொலைவில் திருமலை அமைந்துள்ளது.

**ஆலய அமைப்பு**

சுமார் நானூறு அடி உயரமுள்ள இம் மலையின்மீது ஏறிச்செல்ல 544 படிகள் உள்ளன. மலையடிவாரத்தில் வல்லப விநாயகர் கிழக்கு நோக்கி வனப்புடன் விளங்குகிறார். இவ்விநாயகரை வழிபட்டபின் மலையேறுவது மரபு. படியேறிச் செல்லும்போது மக்கள் இளைப்பாறிச் செல்ல நடுவட்ட விநாயகர், இடும்பன் கோவில்களும் ஓரிரு மண்டபங்களும் உள்ளன.

மலை உச்சியில் உச்சிப்பிள்ளையார் கிழக்கு நோக்கி அமர்ந்திருக்கிறார். உச்சிப்பிள்ளையாரை வணங்கி வலமாக வந்தால், தழைத்து வளர்ந்திருக்கும் தலவிருட்சமாய் விளங்கும் புளியமரமும், அதனடியில் ஆதி உத்தண்ட வேலாயுதமும், மயிலும் உள்ளன. இதனையடுத்த வடபுறம், கோவிலின் மேற்புறம் பூங்குவளைச் சுனை ஒன்று உள்ளது. அகத்தியரின் உபதேசப்படி சப்த கன்னியர்கள் இந்தச் சுனையில் தினமும் பூக்கும் ஒரு குவளைப் பூவை எடுத்து முருகனுக்கு அணிவித்து வழிபட்ட புண்ணியத்தலம் இது. இச்சுனைக்கு ''அஷ்டபத்மக்குளம்'' என்ற திருப்பெயரும் உண்டு. இச்சுனை நீரைக் கொண்டுதான் திருமலை முருகனுக்கு அபிஷேகம் செய்யப்படுகிறது.

வடக்குப் பிரகாரத்தில் வடக்கு பார்த்து அன்னை திருமலைக் காளி என்ற பெயரோடு எழுந்தருளிஉள்ளாள். பின்னர் கோவிலை வலமாக வந்து தெற்கு நோக்கி கம்பீரமாய்த் தோன்றும் கோவில் முகப்பிற்கு வருகிறோம். கோவில் நுழைவாயிலில் நுழைந்தவுடன் ''சண்முகவாசம்'' வனப்புடன் காணப்படுகிறது. அங்கு எப்பொழுதும் முருகன் அடியார்கள் கூட்டமும், விஷேச தினங்களில் பால்குடம், காவடி முதலியன கொண்டு சேவிப்பவர்களின் திருக்கூட்டமும், மேளசப்தமும், சங்கநாதமும் பார்ப்போரைப் பரவசம் அடையச் செய்யும்.

**திருமலைக்குமரன்**

சண்முகவிலாசம் கடந்து கோவிலுக்குள் நுழைய ஒரு நுழைவாயில் உள்ளது. அதனை அடுத்து உட்பிரகாரம் வலமாக வந்து திருமலைக்குமரன் சந்நிதியை அடைகின்றோம். திருமலைக்குமரன் மயிலுடன் சேர்ந்து நிற்கும் திருக்கோலத்தில் நான்கு திருக்கரங்களுடன் தெய்வீகப் பொலிவுடன் காட்சியளிக்கின்றார்.

மூலவர் கிழக்கு நோக்கியும், சண்முகர் தெற்குநோக்கியும் உள்ளனர். மூலவர் விக்ரகம் திருவடியிலிருந்து மணிமகுடம் வரை சுமார் 4 அடி உயரம் உள்ளது. வலது முன்கை எல்லா உயிர்களுக்கும் அபயமளிக்கும் பாவனையிலும் இடது முன்கை கீழ் நோக்கிக் குவிந்த வண்ணம் இடைப் பிரதேசம் வரையிலும் நீண்டு தொங்கும் நிலையில் காட்சி தருகின்றது. இதைச் ''சிம்மகர்ணம்'' என்று சொல்வர். வலது பின் திருக்கரத்தில் வஜ்ராயுதமும், இடது பின் கையில் சக்தி ஆயுதமும் தாங்கிய கோலத்தில் பால முருகரைத் தரிசிக்கலாம்.

**பைரவர்**

உட்பிரகாரத்தில் ஈசான திக்கில் கம்பீரமாய் பார்ப்பவர் மனதில் அச்சம் விளைவிக்கும் பாவனையில் 5அடி அரை அங்குலம் உயரத்தில் நிற்கும் கபால வயிரவரின் சிற்பம் இக்கோயிலின் தனிச் சிறப்பாகும்.

**கோவில் தோன்றிய வரலாறு**

திருமலைக்கு வடதிசையில் அரை மைல் தொலைவில் காடுகள் அடர்ந்த ஓர் இடத்தில் புளியாற்றுக்கோட்டை இடிந்து தூர்த்து போய்க்கிடந்தது. அவ்விடத்தில் முன்பு இருந்த கோவில் வெள்ளப்பெருக்கினால் இடிந்து அழிந்து போனதாகவும், அக்கோயிலின் கண் பூசிக்கப்பட்டுவந்த முருகன் திருவுருவம் வெள் ளப்பெருக்கினால் இழுத்துச் செல்லப்பட்டு, மணலில் யாரும் அறியாத வண்ணம் புதைந்து கிடந்தது என்று கூறுவர். பந்தள மகாராஜா கனவில் இம்முருகன் சென்று தன்னை திரு மலையில் கொண்டு பிரதிஷ்டை செய்யுமாறு கூறவே, அம்மன்னனும் திருமலையில் இம் முருகனை பிரதிஷ்டை செய்து, பூஜைகளும் செய்தான். இன்றும் திருமலை முருகனுக்கு பந்தள மகாராஜா பெயரால் கட்டளைகள் நடைபெறுகின்றன.

**நிர்வாகம்**

இத்திருக்கோவில் தமிழக இந்து சமய அறநிலைய ஆட்சித்துறையினரால் நிர்வகிக் கப்படுகிறது. முதல் நிலைத் திருக்கோவிலாக நிர்வாக அதிகாரி ஒருவர் நியமிக்கப்பட்டு, செயலாற்றி வருகிறார். அறங்காவலர் குழுவும் அரசால் நியமிக்கப்பெற்றுள்ளது.

**தேவஸ்தானத்தின் ஆளுகையில் உள்ள பிற கோவில்கள்**

பைம்பொழில் ஊரில் ஸ்ரீநகரீஸ்வரமுடை யார் கோவில், ஸ்ரீ கற்பக விநாயகர் கோவில், ஸ்ரீசிவந்தி விநாயகர் கோவில், ஸ்ரீசுந்தரராஜப் பெருமாள் கோவில், பெயர்க்கினியர் சாஸ்தா கோவில், மாதாக்கோவில், நரபலி கொண்ட அம்மன் கோவில் ஆகியவை அமைந்துள்ளன.

**கல்வெட்டுக்கள்**

ஸ்ரீநகரீஸ்வர முடையார் கோவிலில் பத் துக் கல்வெட்டுக்களும், ஸ்ரீ சுந்தரராஜப் பெரு மாள் கோவில் ஒரு கல்வெட்டும் கிடைத்திருக் கின்றன.

**திருப்பணி செய்த அம்மை**

திருமலைக்குமரன் கோவில் மேல் தளத் தில் ''சண்முக விலாசம்'' கட்டிடத்தையும் மற்றும் பல திருப்பணிகள் செய்தும், புளி யரைக் கிராமத்தில் திருக்கோவிலுக்கு பாத் தியப்பட்டு சுமார் 150 ஏக்கர் நஞ்சை நிலத்தை செப்புப் பட்டயத்தின் ஆதாரத்தை வைத்து, எவ்வித வாகன வசதியும் இல்லாத அன்றைய நாளில் திருவனந்தபுரம் வழக்கு மன்றத்தில் நீதியை நிலைநாட்டி முருகன் அருளால் திரு மலைக் குமரனின் அத்தனை சொத்துக்களை யும் அவனுக்கே உடைமை ஆக்கி, தன் வாழ் நாள் அனைத்தையும் அவன் தொண்டிற்கே அர்ப்பணித்த உத்தமி, மாதர் குல மாணிக்கம், நெடுவயல் கிராமத்தைச் சேர்ந்த சிவகாமி அம்மையார் ஆவார். அன் னாருக்கு ''வண்டாடும் பொட்டல்'' என்று திருமலைக்குச் செல்லும் வழியில் ஆலயம் அமைத்து, தினப்பூஜையும், வைகாசி அனுசத் தில் சிறப்புப் பூஜையும் நடைபெறுகிறது.

**வழிபட்ட அடியார்கள்**

அருணகிரிநாதர் இத்திருமலைக்கு எழுந் தருளி முருகனைப் போற்றி மூன்று திருப்புகழ் பாடல்கள் பாடியுள்ளார். வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் திருமலை முருகனைப் புகழ்ந்து பாடியுள்ளார்.

*1939*-ஆம் ஆண்டு கொட்டா குளத்தைச் சேர்ந்த சுப்பையாப்பிள்ளை என்பவர் தன் னைப் பீடித்திருந்த குன்ம நோய் தீர தன் நாக்கைத் துண்டித்து முருகன் திருவடிகளுக்கு அர்ப்பணித்து நோய் நீங்கி, மீண்டும் நாக்கு வளரப்பெற்றார்.

சுமார் 45 வருடங்களுக்கு முன்பு புளி யங்குடியைச் சேர்ந்த சங்கரகுமார் ஆசாரி என்பவர் தன்னை வாட்டி வந்த நோய் தீர திருமலைக் குமரன் திருமுன்பு தன் நாக்கைத் துண்டித்து எம்பெருமானுக்கு காணிக்கைஆக்கி நாக்கும் வளரப் பெற்றார். திருமலை முரு கனுக்குப் பால்குடம், காவடி முதலியன செலுத்தி பாலகாஷ்ட பீடைகள் நீங்கப்பெற் றவர்கள் பலர். அவனை வழிபடும் அன்பர்கள் கணக்கில் அடங்கா. அவன் சந்நிதியில் நோன்பு இருந்து ஊமையாய் இருந்து அவன் அருளால் வாய் பேசியவர்களும், கண்பார்வை பெற்றவர்களும் ஏராளம்.

**விழாக்கள்**

ஆண்டுதோறும் திருமலைக் குமரனுக்குப் பல விழாக்கள் விமரிசையாக நடைபெறும். சித்திரை முதல்நாள் திருப்படி விழாவும், வைகாசியில் விசாக விழாவும் நடைபெறும்.

கார்த்திகை கடைசி சோம வாரத்தன்று திருமலைக் குமரனை பைம்பொழிலுக்கு எழுந்தருளச் செய்து அன்று இரவு தெப்ப உற் சவ விழா மிகச் சிறப்பாக நடைபெறும்.

தைமாதம் - பிரமோற்சவம் பத்து தினங் கள் பைம்பொழில் நகரீஸ்வரமுடையார் ஆலயத்தில் வைத்து நடைபெறும். தைப் பூசத்தன்று தீர்த்தவாரி நிறைவுற்று, 11 ஆம் நாள் காலை கருணைக் கடவுளாம் குமரன் திருமலைக்குப் பிரியா விடை பெற்றுச் செல் வார்.

**நிறைவுரை**

இத்திருமலையில் தினந்தோறும் எட்டு காலப் பூஜைகள் நடைபெறுகின்றன. காலை 6 மணி முதல் இரவு 8.30 மணி வரை ஆலயம் திறந்திருக்கும். வற்றாத வரம் அளிக்கும் திரு மலை முருகனைத் தொழுது குறைவிலா வாழ்வு பெறுவோமாக.

# திருமுறைகள் பயிலுக

திருவாவடுதுறை ஆதீனம் சீலத்திரு
சிவப்பிரகாச தேசிக
பரமாச்சாரிய சுவாமிகள்

*[அண்மையில் திருவாவடுதுறை ஆதீன சுவாமிகள் பல்வேறு சமய நிகழ்ச்சிகளில் பங்கு பெற்று ஆற்றிய அருளுரை திருக்கோயில் வாசகர் களுக்காக மகிழ்வுடன் வெளியிடப்படுகிறது.]*

திருவதிகையில் ''அப்பர் இல்லம்'' தொடங்கி வைத்து சீர்வளர்சீர் குரு மகாசந்நிதானம் அவர்கள் ஆசியுரை அருளியபொழுது,

''இன்று அப்பர் இல்லம் செயல்படத் தொடங்கி விட்டது. இவ் இல்லம் நம் அனைவர்க்கும் சொந்தம், இதனுடைய நல்ல இயக்கத்திற்கும் செயற்பாட்டிற்கும் நீங்கள் அனைவரும் உடலுழைப்பும் பொருளுதவியும் தாராளமாக வழங்க வேண்டும். நீங்கள் உங்கள் அன்பர்களுடன் அடிக்கடி இந்த இல்லத்திற்கு வந்து இது நன்கு வளர்ச்சி பெறவும் சிறந்த பயன்விளைக்கும்படியாகவும் விளங்கத் துணையாக இருத்தல் வேண்டும். இவ் இல்லத்தில் மாணவர்கள் கல்வி அறிவைப் பெறுவதோடு, இறைவழிபாடு, பண்பாடு முதலியவற்றிலும் சிறப்புடைய முறையான பயிற்சிகள் பெறத் தகுந்த ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. இங்குள்ள ஆதீனக் கிளைமடத்தில் துறவியர்களுக்கும் வறியவர்களுக்கும் ஒரு வேளை உணவு வழங்கப்படும்.

அருளாளர்கள் சாதி வேறுபாடுகளைப் பாராட்டியது இல்லை. நமது திருமுறைகளில் இதற்கு நிரம்ப ஆதாரங்கள் உள்ளன. சைவ சைவ சமயாசாரியர்களுள் முதன்மையில் வைத்து போற்றப்படுவர்களாகிய திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் தலங்களுக்கெல்லாம் சென்று பதிகங்கள் அருளி இறைவனை வழி படும்பொழுது அவர்களுடன் திருநீலகண்ட யாழ்ப்பாணரும் செல்வதும். யாழில்இசைகூட்டி பதிகப் பண்ணொடு இயைந்து வாசித்து வழி பட்டார். திருக்குறிப்புத் தொண்டர் என்னும் நாயனார் வண்ணார் குலத்தவர். நந்தனார் என்னும் திருநாளைப்போவார் நாயனார் ஆதி திராவிடர் ஆவார். இவர்களெல்லாம் செயற்கரிய செயல்கள் ஆற்றிப் பெருமான் அருளைப் பெற்றவர்கள். பெரியவர்கள், இவர்களை வழிபடுவது சைவ மரபு என்பதை நினைவிற் கொள்ள வேண்டும் அறுபத்து மூன்று நாயன்மார்களுள் திருமூலர் ஒரு பெரியவர். இவர் தமிழ் மூவாயிரம் என்னும் திருமந்திரத்தை அருளியவர். சைவத் திருமுறைகளில் இந்நூல் பத்தாந்திருமுறையாகப் போற்றப்படுகிறது. ஒரு திருமந்திரப் பாடலில் அவர் 'என்னை நன்றாக இறைவன் படைத்தனன், தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே'' என்று அருளியுள்ளார். திருஞானசம்பந்தப் பெருமான் தம்மைத் 'தமிழ் ஞான சம்பந்தர்' என அறிவித்தருளுகின்றார். (இப்பெருமக்கள் அருள்வாக்கால் தமிழும் சைவமும் பிரிக்கப்பட முடியாதவை என அறியலாம்). திருமூலர் ஒன்றே குலமும், ஒருவனே தேவனும் என்று கூறுகிறார். இத்தொடரை இன்று அனைவரும் மேடைகளில் உரக்கப் கூறி வருகிறார்கள். இத்தொடரின் கருத்தையோ அதனை அடுத்து வருகின்ற அப்பாடற் பகுதிகளின் அறிவுரைகளையோ யாரும் பின்பற்றுவதில்லை. கற்பதும் சொல்வதும் மட்டும் போதாது. கற்றபடி வாழவேண்டும்.

அதிகாலையில் பிரம்ம முகூர்த்தத்தில் எழவேண்டும். அப்பொழுது 'ஓசூன்' எனும் நல்காற்று உடலில் பட்டு உடல் ஆரோக்கியத்தையும் மனத்தூய்மையையும் விளைவிக்கிறது. விஞ்ஞான வழியாகவும் அறிஞர்கள் இதனை நிரூபித்துள்ளாரர்கள். பெருவாரியான வீடுகளில் வானொலிப் பெட்டியும் தொலைக் காட்சிப் பெட்டியும் இருக்கின்றன. 24 மணி நேரங்களிலும் நிகழ்ச்சிகள் அமைந்து மக்களை ஈர்க்கின்றன. நிகழ்ச்சிகள் எவ்வாறெல்லாம் நமது பண்பாடுகளைக் கெடுப்பனவாகவுள்ளள என்பதை நீங்கள் அறிவீர்கள். நாமும் கெட்டு நமது குடும்பத்தினர்களின் பழக்க வழக்கச் சிறப்புகளைப் பாழ்படுத்திக் கொள்ள வேண்டுமா? சிந்திக்க வேண்டும்.

ஒவ்வொருவர் வீட்டிலும் இன்ப அற வாழ்வை அறிவுறுத்தும் திருக்குறள், தேவாரம் முதலாய திருமூறைகள் திவ்யப் பிரபந்தம் முதலாய நூல்களைத் தொகுத்து வைத்திருத்தல் வேண்டும். ஒரு சிறுபொழுதையேனும் அந்நூல்களைப் படித்துப் பொருளுணர்ந்து பயன் கொள்ள ஒதுக்குதலைப் பழக்கத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். எந்தப்பிரச்சனையும் தீரத் திருமுறைப் பாடல்கள் நமக்கு வழிகாட்டும். அன்புடன் மனம் ஒன்றி அப்பதிகங்களை ஓதி வந்தால் போதும். கைமேல் பலன், இதில் சந்தேகமே வேண்டாம். குளிர்ச்சுரம், வெப்பு நோய், வயிற்றுவலி, மயங்கிக் கிடத்தல் (முயலகன் நோய்) வாய் பேசுந்தன்மை இலாமை இவை நீங்க வேண்டுமா? அதற்குரிய பதிகங்கள் உள்ளன. திருமணம் பெற, பொருள் வந்து சேர, பதிகங்கள் உள்ளன. 'இடரினும் தளரினும்' எனும் திருவாவடுதுறைப் பதிகத்தை ஓதினால் பணக் கஷ்டமே வராது.

உடற்பயிற்சிக்கு என கிரிக்கட், ஹாக்கி, கால் பந்து, கோல்ஃப் எனப் பலவகை விளையாட்டுக்கள் இன்று இருக்கின்றன. இவற்றிற்கு

விஸ்தாரமான இடமும், துணைவர்களும் வேண்டும். யோகாசனம், பிராணாயாமம், தியானம் முதலிய பயிற்சிகள் செய்யபிறர் கூட்டு வேண்டாம். இருக்கும் இடத்தில் இருந்து கொண்டே செய்யலாம். உடம்பை வளர்த்து உயிரையும் வளர்க்கும் உபாயம் இவை. 'இங்குக் கூடியுள்ள அன்பர்கள் யாவரும் இன்ப நல்வாழ்வில் திகழ வேண்டும் எனத் திருவருளைச் சிந்தித்து வாழ்த்துகிறோம்'.

'நமச்சிவாய வாழ்க நாதன்நாள் வாழ்க
இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான்
தாள் வாழ்க''

என்று ஆசியருளினார்கள்.



பிறகு சீர்வளர்சீர் குருமகாசந்நிதானம் அவர்கள் பண்ருட்டியில் ஆதீனம் நடத்தும் சைவ சித்தாந்த நேர்முகப் பயிற்சி மைய வகுப்பிற்கு எழுந்தருளிய பொழுது வகுப்பு ஆசிரியரும் மாணவ அன்பர்களும் மகா சந்நிதானம் அவர்களுக்குப் பூரண கும்ப மரியாதைகளும், மலர்மாலைகள் சமர்ப்பித்தும் பாதபூசை செய்தும் வணங்கி ஆசிபெற்றார்கள். மகா சந்நிதானம் அவர்கள்ஆசியருளியபொழுது 'பழந்தமிழர் நெறியே சைவ சித்தாந்தம், தருக்க ரீதியாக அமைந்த உயரிய தத்துவங்களைக் கொண்டது. நல்வாழ்விற்குப் பொருத்தமாக நெறிப்படுத்தியுள்ளார்கள், மரணத்தை நினைந்து அஞ்சத் தேவையில்லை. நம் கண்சுளுக்கு உடல் காணப்படுகிறது. அவ.. எல்லை இயக்கும் உயிர் கண்களுக்குப் புலப்படுவதில்லை, அது போல சிற்றறிவு உடைய உயிர் இயங்கப் பேரறிவும் பேராற்றலும் உடைய இறைவன் வேண்டுவது அவசியமாகும். இறைவன் உயிரை உண்டாக்கவில்லை. இறையைப் போல உயிரும் அநாதிப் பொருள். 'என்று நீ அன்று நான் உன் அடிமை அல்லவோ' என்பார் தாயுமான சுவாமிகள். இறை, உயிர், தளை எனும் முப்பொருளும் என்றும் உள்ள பொருள் என்பது சைவ சித்தாந்த அடிப்படைக் கொள்கை. அறிவு பூர்வமாக ஆராய்ந்ததாகும். இதுவே முடிந்த பொருத்தமுடைய முடிபாகும். 'பதிபசுபாசம் எனப் பகர் மூன்றில், பதியினைப் போல் பசு பாசம் அநாதி' என்பார் திருமூலரும்.

இப்பயிற்சியில் சேர்ந்து நலம் பெறுகின்ற நீங்களும் உங்களைப் போல பல ஊர்களிலும் நிகழும் வகுப்புகளில் பயிலும் பல நூற்றுக் கணக்கான மாணவ அன்பர்களும் பூர்வ புண்ணியம் சிறப்பாகப் பெற்றவர்கள். இத்தகு ஊழ் பெறல் அரிதுஅரிது, கிடைத்துள்ள இந்நல்வாய்ப்பினை நன்கு பயன்படுத்திக் கொள்ள வேண்டும். இப்பயிற்சி வகுப்பு ஒன்றையும் வராதிருந்து. தவறவிடாதீர்கள். வாய்த்துள்ள ஆசிரியர் சிறந்த திறமையாளர். நன்கு பயன்படுத்திக் கொண்டு ஆணவ மல நீக்கம் பெற்று இறையருளில் இன்ப நல்வாழ் வெய்தித் திகழ இறையருள் துணை நிற்பதாக என்று அருளினார்கள்.

பின்னர் பயிற்சி வகுப்பு ஆசிரியர் திரு. சிவஞானம் அவர்கட்குப் பட்டாடை அணிவித்தும் ஆசிரியர், மாணவர் அனைவர்க்கும் திருநீற்றுப் பிரசாதம் வழங்கியும் ஆசியருளினார்கள்.

நண்பகல் ஆதீனம் கிளைமடத்தில் மாகேசுவர பூசையும் பிரமுகர்களுக்குச் சிறப்பு விருந்தும் நிகழ்ந்தன. சாதுக்கள் ஏழைகளுக்கு அன்னம் பாலிப்பு நிகழ்ந்தன.

பிறகு பண்ருட்டி அருகில் ஆண்டிப் பாளையம் ஆதி திராவிடர்கள் வாழும் பகுதியிலுள்ள அருள்திரு மாரியம்மன் கோயிலுக்குச் சென்றபொழுது அன்பர்கள் பூரண கும்ப மரியாதையுடன் மாலைகள் சமர்ப்பித்து வழிபட, மகளிர் பாதபூசை செய்து வணங்கி வரறார்கள். மகா சந்நிதானம் அவர்கள் ஊனமுற்ற மகளிர்க்கும், முதியோர்க்கும், மாணவிகளுக்கும், பூசாரிக்கும் புத்தாடைகள் வழங்கி ஆசீர்வதித்தார்கள்.

அப்பகுதி மக்களுக்கு ஆசியருளும்போது சைவ சமயத்தில் சாதி வேறுபாடு இல்லை. ஆதலால் சாதி வேறுபாடு பாராமல் அனைவரும் ஒற்றுமையாக இருக்க வேண்டுமெனவும் மது அருந்துதலோ போதைப் பொருள்களுக்கு அடிமை ஆகாமலோ இருக்க வேண்டுமென்வும் கூறி அனைவருக்கும் ஆசி அருளினார்கள்.

---



# இராமாநுஜர்

**வே. இராகவன்**
திருவரங்கம்

'ஆராவமுதே! அடியேனுடலம் நின்பாலன்
பாயே
நீராய் அலைந்துகரைய உருக்குகின்ற
நெடுமாலே!
சீரார்செந்நெல் கவரிவீசும் செழுநீர்த்
திருக்குடந்தை
ஏரார்கோலம் திகழக் கிடந்தாய் கண்டேன்
எம்மானே!
(திருவாய்மொழி 5-8-1)

என வீரநாராயணபுரம் திருமன்னனார் முன்னே இரு வைணவர்கள் கானம் செய்யக் கேட்டு நெஞ்சுருகி நிற்கும் நாதமுனிகள் 'குருகூர் சடகோபன் குழலின் மலியச் சொன்ன ஓராயிரத்துள் இப்பத்தும்' (திருவாய்மொழி 5-8-11) என்று கேட்டவளவில் இவ்வாயிரம் பாசுரங்களையும் சேகரித்து உலகினுக்கு வழங்க வேண்டும் என்னும் எண்ணம் அவர் உள்ளத்தே எழுந்தது.

திருப்புளியடிவாரத்தே சன்னதிகொண்டிருக்கும் நம்மாழ்வார் திருமுன்பே பன்னீராயிரம் உரு மதுரகவி ஆழ்வாரின் 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' என்னும் பிரபந்தத்தை விண்ணப்பித்து நின்றார். உகப்படைந்த நம்மாழ்வாரும் திருவாய்மொழி ஆயிரத்தோடு மற்றுமுள்ள மூவாயிரத்தையும் உபதேசித்தார். மேலும் அட்டாங்க யோகத்தினையும் உபதேசமாக வழங்கினார். 'பொலிக பொலிகபொலிக கலியும்கெடும் கண்டுகொண்மின்' (திருவாய் 5-2-1) என்ற பாசுரம் வந்த அளவிலே இராமாநுசரின் திருஅவதாரம் நிகழவிருப்பதையும் தெரிவித்து அவரின் பவிஷ்யதாசார்ய விக்ரகத்தையும் சமைத்துக் கொடுத்தார். மேலும் 'இப்பவிஷ்யதாசார்ய விக்ரகத்திற்கு அடிதாமே யாதலால் தமக்கடியுமாய்த் தம் கார்யத்திற்குக்கடவதுமாய் இருக்கும் இனிமேல் நம் தர்சனத்திற்கு நிர்வாகராகவும் அடியிட்டு வைத்தோம். அவர் திருவடியைப் பற்றுதல் நம் திருவடியைப் பற்றுதல் போலாகும்' என்றும் சொன்னார்.

அறுபதினாயிரம் ஆண்டு செங்கோல் செலுத்திய தசரத சக்ரவர்த்திகளும் மக்கட்பேறின்றி 'புத்திர காமேட்டி' யாகம் செய்து மணியான மக்கள் நால்வரைப் பெற்றார்போல் ஆசூரிகேசவப் பெருமாளும் புத்திரப் பேறின்றி 'ப்ருந்தாரண்ய சேத்ரம்' எனப் பெருமை பெற்ற சென்னை திருவல்லிக்கேணி திரு பார்த்தசாரதி சுவாமி சன்னதியில் புத்திர காமேட்டி யாகம் புரிந்து, உலகினை உய்விக்க வல்ல உத்தமரான திருமகனாரைஅடைந்தார். பெற்றோர் சூட்டியதிருநாமமோ இராமாநுசன். நம்பெருமாள் உகந்தழைத்திட்ட திருநாமமோ உடையவர். ஆசார்யராம் திருக்கோட்டியூர் நம்பி அழைத்திட்டதிருநாமம் எம்பெருமானார். இளையாழ்வார் என்று அழைப்பது வைணவப் பெருமக்களுக்கு உகப்புக்குரியதாயிற்று.

தானே பிரதம குருவாய் நின்று உபதேசித்தாலும் தனக்கொரு ஆசார்யர் இல்லாத குறை ஒன்றுண்டு எம்பெருமானுக்கும். மேலும் இராமனாய், ஞானமிக்கவராய் சம்சாரிகளைப் போல் அஞ்ஞானத்திலே சிக்கிய வசிட்டமாமுனியையும், வைராக்யம் சற்றுமின்றி தேவலோக ஆடலரசியின் பின்னே சென்ற விசுவாமித்திரரையும் ஆசார்யராக அடைந்ததும், கிருஷ்ணனாய் ஆராவமுதமாய் முன்னே நிற்க சாந்தீபினி முனிவர் தன்னை வேண்டாது என்றோ மரித்துப் போன தனயனை வேண்டி நின்ற பக்திக் குறையுள்ளவரை ஆசார்யராக அடைந்ததும் அவனுக்குக்குறை.

ஆகவே சதாசார்யன் ஒருவனை அடைந்திட வேண்டுமென அவன் திருவுள்ளம் விழைந்தது. தமக்கு நித்திய கைங்கர்யம் புரிவதில் விருப்புற்றவனாய், இராமனான காலத்து தம்பி இலக்குமணனாகவும், கிருஷ்ணனான காலத்து அண்ணன் பலராமனாயும் தோன்றி எல்லாவித அடிமைகளும் புரிந்திட்ட ஆதிசேடனை நோக்கி, 'நீர் புவியில் ஆசார்யனாய்த் தோன்றி உலகினைத் திருத்திவாரும்'' எனப் பணித்தான். ஆதிசேடனும் புத்திரகாமேட்டி யாகம் செய்திட்ட ஆசூரிகேசவப் பெருமாள்

தம்பதியருக்கு அருமை மகனாய்த் தோன்றினான்.

இவ்வாறு இராமானுசராய்த் தோன்றிய காலத்தினையும் அவரின் ஞானம் நற்பண்பு நற்குணங்களை எடுத்துக் காட்டுமாறு 'கடபயாதி சங்க்யை' என்னும் கணிதப்படி 'தீர்லப்தா' என்னும் சொல்லால் குறிப்பிடுவர் பெரியோர்.

| எழுத்து | எண் |
|---|---|
| க, ட, ப, ய | 1 |
| க, ட, ப, ர | 2 |
| க, ட, ப, ல | 3 |
| க, ட, ப, வ | 4 |
| ங, ண ம, ச | 5 |
| ச, த, — ஷ | 6 |
| ச, த, —ஸ | 7 |
| ச, த, —ஹ | 8 |
| ச, த, | 9 |
| ஞ, ந | 0 |

குறிப்பு : மெய்யெழுத்தைக் கணக்கில் எடுத்துக் கொள்ளக் கூடாது. நெடிலாகிலும் குறிலாகிலும் மேலே கண்டவாறு அவ்வெழுத்துக்குரிய எண்ணையே கொள்ள வேண்டும். 'தீர்லப்தா' என்னும் சொல்லிற்கு மேற்கூறிய கணக்குப்படி தீ-9; ல-3, தா,—9 என்று மூன்றெண்களும் சேர்ந்து 939 என்றாகும். இவ்வெண்ணைத் திருப்பி எழுத வேண்டும். அப்பொழுதும் 939 என்னும் அதே கிடைக்கும். இது சகவருடத்தைக் காட்டும். சக ஆண்டிற்கும் கிருத்துவ ஆண்டிற்கும் வித்தியாசம் 78 ஆண்டுகளாகும். ஆக சக ஆண்டான 939 உடன் 78ஐக் கூட்ட கிருஸ்துவ ஆண்டான கி.பி. 1017 கிடைக்கும், இராமானுசர் தோன்றியது ரௌத்ரி என்னும் தமிழ் ஆண்டாகும். ஆகவே கி.பி. 1017க்குச் சரியான தமிழ் வருடம் 'பிங்கள' ஆண்டாகும். சக்ரவர்த்தித் திருமகனார்க்கு (இராமனுக்கு) முடிசூட்டப் பாரித்த சைத்ர (சித்திரை) மாதம் 18-ஆம் தேதியாக அமைந்தது.

''ஆரானும் மூதறியும் அம்மனைமார்
சொல்லுவார்
பாரோர் சொலப்படும் கட்டுப்படுத்திரேல்
ஆரானும் மெய்ப்படுவனென்றார். அதுகேட்டு
காரார் குழற்கொண்டைக் கட்டுவிச்சி
கட்டேறி''
(சிறிய திருமடல்)

பெண்ணுடை போர்த்திப் பரகால நாயகியாய் திகழும் திருமங்கையாழ்வார் குடக்கூத்தன் கண்ணழகிலே கட்டுண்டு மோகம் கொண்டாள். அவனைக் கூடஇயலாமையாலே நோய் வாய்ப்பட்டாள். நோயின் காரணமறியாது தவிக்கும் பெற்றோர்களுக்கு 'யாரேனும் ஒரு கட்டுவிச்சியை அழைத்து நோயின் காரணத்தை அறியலாம்' என சில வயதான மூதாட்டிமார் யோசனை கூறினார்கள். தற்செயலாய் தெருவழியே சென்ற கட்டுவிச்சி இது கேட்டுத் தன்னை அழைத்திடாதபோதிலும் வீட்டினுள் நுழைந்தாள். இவ்வாறே ஆசையுடையார் என்று அறிந்த மாத்திரமே அவர்கள் வருந்தி அழைத்திடாத போதிலும் தானேமுன் சென்று அவர்கள் உய்யும்வண்ணம் நல்லுபதேசம் செய்திடும் இராமானுசரைப் போன்றோர்களை இது காட்டிடுவதாகக் கொள்வர் பெரியோர். இவ்வாறான ஆசார்யர்களை 'க்ருபாமாத்ர பிரசன்னா சார்யர்' என்பர். கடுமையான அடிமை கைங்கர்யம் கொண்டு உபதேசிப்பாரை ஸ்வாது வ்ருத்தி ப்ரசன்னாசார்யர்' என்பர்.

முத்துமாலையின் மத்தியிலே பிரகாசிக்கும் ஒளிமிக்க மாணிக்கம் போல் தம் ஆசார்யர் அவர் ஆசார்யர் எனப் படிப்படியாக ஏறு முகமாயும், தம்சிஷ்யர், அவர் சிஷ்யர் எனப் படிப்படியாக இறங்குமுகமாயும் இருக்கும் ஆசார்ய பரம்பரையில் நடுநாயகமாய் விளங்கும் இராமானுசர் இவ்விரு சம்மந்தத்தார்களுக்கும் பிரகாசமளிப்பவராய் விளங்குகிறார். பதினெட்டுத் தடவை திருக்கோட்டியூருக்கு நடந்து அடிமைக் கைங்கர்யம் புரிந்து வருந்திப் பெற்ற திருமந்திரார்த்தத்தை ஆசையுடைய வைணவர்களுக்கு உபதேசித்தார். ஆசார்யராம் திருக்கோட்டியூர் நம்பியின் நியமனத்தையும் மீறி உபதேசித்தார். இதனால் தாம் ஒருவரே நரகம் புக வேணும். இவ்வர்த்தம் கேட்டோர் அனைவரும் உஜ்ஜீவித்துப் போவரே என்னும் பொங்கும் பரிவாலே இதனைச் செய்தார். இது கேட்டு உளமகிழ்ந்த திருக்கோட்டியூர் நம்பியும்'எம்பெருமானாரே' என அழைத்திட்டார்.

அருளாளப் பெருமாள் எம்பெருமானார் என்னும் பெரியார் இளையாழ்வாரின் சிஷ்யராகவும் ஆசார்யராகவும் விளங்கியவர். இவரின் சிஷ்யர்களான அனந்தாழ்வான் எச்சான், தொண்டனூர் நம்பி, மருதூர் நம்பி ஆகியோர்களுக்கு 'இவ்வாத்மாவிற்கு ஆசார்யர் ஒருவரோ பலரோ' எனச் சந்தேகம் எழுந்தது. இராமானுசரை அணுகியவளவில்'பொன்னாச்சியாரைக் கேட்டுத் தெளியுங்கள்' என்றார். இராமானுசரின் சிஷ்யரான உறங்காவில்லிதாசரின் மனைவியாவார் இப்பொன்னாச்சியார். அவரோ 'அபலையான யான் இதனைத் தீர்மானித்துச் சொல்லவல்லவளோ! இதனைத் தெளிவிக்கவல்லவர் இராமானுசரே' எனச் சொல்லிக் கொண்டே தம் குழற்கற்றையை உதறி ஒன்றாக ஒட்ட முடிந்து போட்டுக் கொண்டு தரையில் கிடந்த காவிநூல் ஒன்றை எடுத்துத் தலையில் வைத்துக் கொண்டாள். பொன்னாச்சியாரின் இச்செய்கையைக் கேட்டு குழற்கற்றையை உதறியதன் மூலம் 'இவ்வாத்மாவிற்கு ஆசார்யனைப் பார்க்கும்போது 'பகவத் விஷயம்' 'ஸ்ரீபாஷ்யம்' 'இதிகாச புராணங்கள்' போன்றவற்றை உபதேசித்தவர்கள் பலராக இருக்கும்'. பின் ஒன்றாய் முடிந்ததாலே, 'இவனுக்கு ஆசார்யனாய் நின்று பேற்றைப் பண்ணிக் கொடுப்பவன் ஒருவனே.' காவி நூலைத் தலையிலே வைத்துக் கொண்டதால், 'பேற்றுக் குடலாய் அறுதியிட்டது, 'காஷாயம் உடுத்தியிருக்கிற எம்பெருமானாரைக் காட்டுகிறது என்று தன்னைக் காட்டி அவர்கள் ஐயம் தீர்த்தார் இராமானுசர்.

அக்காலத்தே வாழ்ந்திருந்த ராஜ மகேந்திரப் பெருமாள் அரையர் என்பாருக்கு அரங்க மாளிகை என்னும் ஒருகுமாரர் இருந்தார். இவரோ பெற்றோர் சொல் கேளாது தீய பழக்க வழக்கங்களுக்கு அடிமையாய் வேசி வீடே கதியெனக் கிடந்தார். இதறிந்த இராமாநுசர் சிஷ்யர்களைக் கொண்டு அவரை பிடித்து வரச் செய்தார். 'பிள்ளாய்! நீ நம்மோடு ஒட்டாது ஒதுங்கித் திரிந்தாலும் உன்னை நான் விடப் போவதில்லை.' எனச் சொல்லிப் பேரருளாளன் சன்னதிக்கு அழைத்துச் சென்றார். அங்கு திருக்காப்பை (கதவை) தாளிட்டுக்கொண்டு எம்பெருமானுக்கும் சீவாத்மாக்களுக்கும் உள்ள சம்மந்தத்தை விளக்கியும் ரகஸ்யார்த்தத்தையும் உபதேசித்தார். 'மேலும் தம் திருவடிகள் இரண்டையும் அவன் சிரசிலே வைத்து 'நீ பற்றிக் கிடந்த காலுக்கும் நம்முடையஅடிக்குமுள்ளவேறுபாடு காணாய். முன்னது நரகத்திற்குக் காரணமாகும். நம்முடையதோ மோட்சத்திற்கு ஏதுவாகும். ஆகவே எம்திருவடிகளையே தஞ்சமாக நினைத்திரும்' என்றருளிச் செய்தார். இவையாவும் எம்பெருமானாரின் இனிமை, சாந்தம், வலுவான திடசித்தம், பின்விளைவுகளைச் சிந்தித்து செயல்படும் ஆற்றல் ஆகிய ஞானம் நற்குண நற்பண்புகளைப் பிரகாசிக்கச் செய்கின்றன.

நம்மாழ்வாரை முப்பத்திரண்டு ஆண்டுகளே இப்புவியில் வைத்திருந்த சர்வேஸ்வரன் அக்குறை தீர உடையவரை நூற்றிருபதாண்டு காலம் இப்புவியில் வைத்திருந்து இவ்வுலகை வாழ்வுறச் செய்தான். 'தர்மோநஷ்ட' என்னும் சொல் எம்பெருமானார் இவ்வுலகினின்றும் மறைந்த ஆண்டினைக் குறித்திடும், தர்மத்தின் பேரிழப்பு ஆகையாலே அவர் மறைவை 'தர்மோநஷ்ட' என்றனர் போலும் முன்கண்டது போல் த 9; மோ—5,; ந—0; ட,—1. ஆகவே கிடைக்கும் எண் 9501. இதனைத் திருப்பி எழுத 1059 என்றாகும். இது சக ஆண்டைக் குறிக்கும். இத்தோடு 78ஐக் கூட்ட கிருஸ்துவ ஆண்டான கி.பி. 1137 ஆகும்; தமிழ் வருடமான பிங்கள வருடம் ஆகும்.

'இராமன் தர்மமே வடிவெடுத்தவன்' 'கிருஷ்ணனே பழமையான தர்மம்' என்றெல்லாம் பேசப்படும் அவன் தானே அர்ச்சையாய்ப் பல திவ்ய தேசங்களிலும் எழுந்தருளி சேவைசாதித்திடுகிறான். அவ்வாறே திருக்குறுங்குடி என்னும் திவ்யதிருப்பதியில் நம்பியாகச் சன்னதி கொண்டிருக்கிறான். இராமாநுசர் திருகுறுங்குடியில் எழுந்தருளிருக்கும் சமயம் ஓர் தினம் வழக்கம்போல் 'வடுகா'! திருமண் இட்டுக் கொள்ள வா' என்றழைத்தார். திருஅனந்தபுரத்திலே இருக்கும் வடுக நம்பி இவர் கூப்பிட்ட குரலுக்கு எவ்வாறு வர முடியும்.? இதுதான் சமயமென்று காத்திருந்தவன் போல் திருக்குறுங்குடி நம்பியும் வடுக நம்பியாய் எம்பெருமானார் முன்னமர்ந்து அவர் திருக்கரத்தால் திருமண் இட்டுக் கொண்டான். சன்னதியில் நம்பியைச் சேவித்து நிற்கும் உடையவர் தாமிட்ட திருமண் அவன் நெற்றியிலே பளிச்சிட ஆச்சர்யமுற்றார். நம்பியோ, 'உடையவரே! நாம் பல அவதாரங்கள் எடுத்தோம். உலகினைத் திருத்திப் பணி கொள்ள விழைந்தோம். பலன் கிட்டாது அடிச்சோதிக்கு எழுந்தருளினோம். ஆயின் நீர் எங்ஙனே இத்தனை நிறைந்த 'ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ' யோடு விளங்குகிறீர்' என வினவினான். 'கேட்கும் முறை தன்னில் கேட்டால் விடை பகர இயலும்' 'என்ற உடையவர் பதிலை கேட்டு உடன்தானும் சிஷ்யனாய் முன் நின்றான். உடையவரும் மந்திர ரத்னம் என்னும் துவயத்தை உபதேசித்து 'இத்தாலே காணும் 'இவ்வளவு வைஷ்ணவஸ்ரீ நிறைவோடு விளங்குவது' எனப் பகர்ந்தார். அன்று தொட்டு நம்பியும் சிஷ்யனாய், 'வைஷ்ணவ நம்பி' என்னும் தாஸ்ய நாமத்துடன் விளங்குகிறான். உபாயமும், அடையும் பேறும் அவனேயாயிருக்க அவனுக்கே உபதேசித்த பெருமை உடையவருக்கே.

உடையவரின் நியமனத்தோடு வரதராஜப் பெருமாள் முன்னே 'வரதாஜஸ்தவம்' என்னும் தாமியற்றிய துதிப்பாடலை விண்ணப்பித்து நிற்கும் கூரத்தாழ்வானுக்கு 'உமக்கும் உம்மைச் சார்ந்தவர்கள் அனைவருக்கும் பரமபதம்' (மோட்சம்) அளித்தோம்' என வரமளித்தான். ஆயினும் தாம் அங்கே 'வானிள வரசாக விருப்பதால் சுதந்திரம் மட்டுப்பட்டிருக்கும். ஆகவே அங்கு அடிமை புரிவாரில் முதன்மையானோரில் ஒருவரான நம் இராமாநுசன் அநுமதி கொண்டு செல்லும்' என்றருளினான். ஆழ்வானின் உள்ளமறிந்த எம்பெருமானாரும் அநுமதி கொடுக்க 'நான் பெற்ற பேறு நாலூரானும் பெறவேண்டும்' எனத் தான் கண்ணிழக்கக் காரணமான நாலூரானுக்கும் அப்பேற்றை அளிக்க வேண்டும்' என்னும் ஆழ்வானின் உயரிய பண்பை உகந்து அவனுக்கு அப்பேற்றை அளித்தார். இவ்வாறு பரமபதம் அருளவல்ல உடையவரின் மறைவு 'தர்மோநஷ்ட' என்றது வெகு பொருத்தமாயிற்று.

''பின்னானார் வணங்கும் சோதி (திருநெடுந்தாண்டகம் 10) எனத் திருமால் அர்ச்சாத்திருமேனி கொண்டு திவ்யதேசங்கள் தோறும் சேவை சாதித்திடுவது போல் எம்பெருமானாரும் திவ்யதேசங்கள்தோறும் அர்ச்சையாய் எழுந்தருளியுள்ளார். அரங்கன் திருக்கோயிலில் நம்பெருமாள் நியமனப்படியாக அகளங்கன் திருவீதியில் தென்கீழ்புரத்தில் சுந்தரபாண்டியன் துலாபுருஷ மண்டபத்தில் யதிஸம்ஸ்கார விதிப்படி திருப்பள்ளிபடுத்தப் பட்டார். பின்னர் பெரிய பெருமாள் நியமனத்தால் உடையவர் திருமேனி பள்ளிபடுத்தப்பட்ட விடத்தில் மூலத் திருமேனியையும் உற்சவத் திருமேனியையும் கந்தாடைஆண்டான் பிரதிஷ்டை செய்வித்தார். மேலும் ஸ்ரீபெரும்புதூரில் 'தானுகந்த திருமேனியையும் திருவரங்கத்தில் 'தானான திருமேனியையும் கண்டு சேவித்து இன்பமெய்தலாம் என்று விபரம் தெரிந்த பெரியோர் கூறுவர்.



'பூமகள்கோன்தென்னரங்கர் பூங்கழற்குப்
பாதுகமாய்த்
தாமகிழுஞ்செல்வச்சடகோபர்- தேமலர்த்தாட்
கேய்ந்தினியபாதுகமாமெந்தையிராமா நுசனை
வாய்ந்தேனது நெஞ்சமே''
(ஆர்த்திப்பிரபந்தம் 10)

நம் பெருமாள் தம் திருவடியை நம்மாழ்வார் சிரசிலே வைத்து, இவர் நம் திருவடி என்றார். ஆகவே பெருமாள் சன்னதியில் அடியார்கள் சிரசிலே சாத்திடும் திருவடி நிலைக்குச் 'சடாரி' என்றும் 'சடகோபன்' என்றும் திருநாமமாயிற்று. உடையவர் சிரசிலே நம்மாழ்வார் தம் திருவடியை வைத்து இவர் நம் திருவடி என்றார். ஆகையால் நம்மாழ்வார் திருவடி நிலைக்கு இராமாநுசன் எனப் பெயராயிற்று. திருவரங்கத்தில் மட்டும் நம்மாழ்வார் திருவடி நிலைக்கு 'மதுரகவி' என்றே பெயர் வழங்கப் பெறுகிறது. திருநகரியினின்றும் நம்மாழ்வார் திருவத்யயந உத்ஸவத்திற்கு வழக்கமாய் எழுந்தருளுவது ஏதோ தடங்கல்களால் நின்று போய் விட்டது. அவ்வாறு இனி நிகழாதவாறு நீடித்து நடக்குமாறு அரங்கன் கோயிலிலேயே நம்மாழ்வாருக்குக் கோயிலெழுப்பி நம்மாழ்வாரையும் பிரதிஷ்டை செய்வித்தார் எம்பெருமானார். ஆகவே இங்கு நம்மாழ்வாரின் திருவடி நிலைக்குத் தம் பெயரை விரும்பாது அவரின் சிஷ்யராம் மதுர கவிகளின் திருநாமத்தையே கொள்ளும்படி செய்தார். உடையவர் திருவடி நிலைக்கு முதலியாண்டான் எனப்பெயர்.

சுபம்

---

**நிதியைப் பொழியும் முகில்என்று நீசர்தம் வாசல் பற்றி**
**துதிகற்று உலகில் துவள்கின்றிலேன் இனிதூய்நெறிசேர்**
**எதிகட்கு இறைவன் யமுனைத் துறைவன் இணைஅடியாம்**
**கதிபெற்றுடைய இராமநுசன் என்னைக் காத்தானே**

**—இராமாநுசர் நூற்றந்தாதி**

---




# இறைவனது சிறப்பு இயல்புகளும், புகழ்மிக்க திருத்தலங்களும், பிறவும்.

" கோயிற் கலைச் செல்வர் "

தி. இராசமாணிக்கம்

பொள்ளாச்சி.

## எண்குணத்தான்

''குணமே போற்றி' என்பர் மணிவாசகப் பெருந்தகையார். இதற்கு 'எட்டு வான் குணங் களையுடைய பெம்மானே போற்றி' என்பது பொருளாகும். அந்த எட்டு குணங்களாவன:

(1) தன் வயத்தனாதல்
(2) தூய வுடம்பினனாதல்.
(3) இயற்கையுணர்வினனாதல்
(4) முற்றுமுணர்தல்
(5) இயல்பாகவே பாசங்களின் நீங்குதல்
(6) பேரருள் உடைமை
(7) முடிவில் ஆற்றல் உடைமை
(8) வரம்பில் இன்பம் உடைமை.

## அட்ட மூர்த்தி

''அட்டமாவுரு வினானே'' என்பர் அப்பர் பெருமான். அதாவது இறைவன் எட்டு வடிவங் களாக இருப்பவன் என்பது பொருள். அந்த எட்டு வடிவங்கள் :—

(1) மண்
(2) தீ
(3) நீர்
(4) காற்று
(5) ஆகாயம்
(6) ஆன்மா
(7) சூரியன்
(8) சந்திரன்

## அட்ட வீரட்ட தலங்கள்

இறைவனது முடிவில்லாத ஆற்றலை உணர்த்தும் வீரச்செயல்கள் நிகழ்ந்த தலங்கள் எட்டு. அவையாவன :—

| தலங்களின் பெயர்கள் | | வீரச்செயல்கள் |
|---|---|---|
| (1) திருவதிகை | — | முப்புரம் எரித்தது |
| (2) திருக்கோயிலூர் | — | அந்தகாசுரனைச் சூலத்தில் கோத்து ஆடியது. |
| (3) திருக்கடவூர் | — | காலனைக் காலால் உதைத்தது. |
| (4) திருவழுவூர் | — | யானை வடிவம் கொண்ட அசுரனைக் கொன்று, தோலை உரித்துப் போர்த்தது. |
| (5) திருவிற்குடி | — | சலந்தராசுரனைக் கொன்றது. |
| (6) திருக்குறுக்கை | — | மன்மதனை நெற்றிக் கண்ணால் எரித்தது. |
| (7) திருக் கண்டியூர். | — | பிரமனது தலையைக் கிள்ளியது. |
| (8) திருப்பறியலூர் | — | தக்கனது பெரு வேள்வியை அழித்தது. |

## ஐம்பெரும் பூதத்தலங்கள்

(1) மண்: திருவாரூர்: —சிவத்தன்மைமிக்கது
காஞ்சிபுரம் —சக்தி தன்மைமிக்கது.
(2) தீ — திருஅண்ணாமலை
(3) நீர் — திருவானைக்கா
(4) காற்று — திருக்காளத்தி
(5) ஆகாயம் — சிதம்பரம்.

சங்கர நயினார் கோயிலும் அதைச் சுற்றியுள்ள நான்கு தலங்களும் ஐம்பெரும் பூதத்தலங்களாகப் போற்றப்படுகின்றன. அவை:

| | | | |
|---|---|---|---|
| (1) | மண் | — | சங்கர நாயினார் கோயில் |
| (2) | தீ | — | கரிவலம் வந்த நல்லூர் |
| (3) | நீர் | — | தாருகாபுரம் |
| (4) | காற்று | — | கோயிற்பட்டி |
| (5) | ஆகாயம் | — | தேவதானம்'' |



திருவையாறும் அதைச் சுற்றிலும் உள்ள நான்கு தலங்களும் ஐம்பெரும் பூதத்தலங் களாகப் பரவப்படுகின்றன. அவை :

| | | | |
|---|---|---|---|
| (1) | மண் | — | திருவையாறு |
| (2) | தீ | — | திருநெய்தானம |
| (3) | நீர் | — | திருமழபாடி |
| (4) | காற்று | — | பெரும்புலியூர் |
| (5; | ஆகாயம் | — | அகண்டவெளி |

### ஐம்பெரும் நடன சபைகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | சிதம்பரம் | — | பொன்னம்பலம் |
| 2. | மதுரை | — | வெள்ளியம்பலம் |
| 3. | திருவாலங்காடு | — | இரத்தின சபை |
| 4. | திருநெல்வேலி | — | தாமிர சபை |
| 5. | குற்றாலம் | — | சித்திர சபை |

### ஐம்பெருந் தொழில்களை உணர்த்தும் நடனத் தலங்கள் :

1. திருநெல்வேலி — காளிகாதாண்டவம் - அல்லது முனிதாண்டவம். படைத்தல்:
2. திருப்பத்தூர் — கௌரி தாண்டவம் - காத்தல்
3. கைலாயநாதர் கோயில், காஞ்சிபுரம்: — சங்கர தாண்டவம் - அழித்தல்,
4. திருக்குற்றாலம் — திரிபுர தாண்டவம் மறைத்தல்,
5. திருவாலங்காடு — ஊர்த்துவதாண்டவம் அருளல்
6. சிதம்பரம் — ஆனந்த தாண்டவம், ஐந்து தொழில்களையும் குறிப்பது.

### சப்த விடங்கத் தலங்கள்

உளியால் செதுக்கப்படாத இலிங்கத் திருவுரு 'விடங்கர்' எனப் பெறும். அவை உள்ள தலங்கள் ''விடங்கத் தலங்கள்'' எனப் பரவப்படுகின்றன. அவை : —

| தலம் | விடங்கர் பெயர் | நடனத்தின் பெயர் |
|---|---|---|
| திருவாரூர் | வீதிவிடங்கர் | அசபா நடனம் |
| திருநள்ளாறு | நாகவிடங்கர் | உன்மத்த நடனம் |
| திருநாகைக் காரோணம் | சுந்தரவிடங்கர் | பாராவார தரங்க நடனம் —வீசி நடனம் |
| திருக்காறயில் | ஆதிவிடங்கர் | குக்குட நடனம் |
| திருக்கோளிலி | அவனிவிடங்கர் | பிருங்க நடனம் |
| திருவாய்மூர் | நீல விடங்கர் | கமல நடனம் |
| திருமறைக் காடு [வேதாரண்யம்] | புவனிவிடங்கர், | அம்ஸபாத நடனம் |

## பஞ்சாரண்ய தலங்கள்:

| வனத்தின் பெயர் | | தலம் |
|---|---|---|
| முல்லை வனம் | — | திருக்கருகாவூர் |
| பாதிரி வனம் | — | திருஅவனிவன நல்லூர் |
| வன்னிவனம் | — | அரித்துவாரமங்கலம் (திருஅரதைத் பெரும்பாழி) |
| கருநிறப்பூளைச் செடிகள் நிறைந்த பகுதி | — | திரு இரும்பூளை ( ஆலங்குடி ) |
| வில்வ வனம் | — | திருக்கொள்ளம் புதூர். |

மேலே குறிப்பிட்ட ஐந்து தலங்களும் ஒரே கோடு போன்று அமைந்துள்ளதால், ஒரே நாளில் இவற்றைவணங்குவது உத்தமம்

| தலம் | | வணங்கும் நேரம் |
|---|---|---|
| திருக்கருகாவூர் | — | காலை 5 மணி முதல் 6 மணிக்குள் |
| அவனிவன நல்லூர் | — | காலை 8-30 முதல் 9-30 மணிக்குள் |
| அரித்துவார மங்கலம்: | — | உச்சிக்காலம்— 11 மணி முதல் 12-30 மணிக்குள் |
| ஆலங்குடி | — | மாலை 5 மணி முதல் 6 மணிக்குள் |
| திருக்கொள்ளம் புதூர் | — | இரவு 7-30 மணி முதல் 8 மணிக்குள் |

## நவக்கிரகத் தலங்கள்

| நவக்கிரகத்தின் பெயர் | | தலம் |
|---|---|---|
| 1. சூரியன் | — | சூரியனார் கோயில் |
| 2. சந்திரன் | — | திங்களூர் |
| 3. செவ்வாய் | — | பழனி, வைத்தீசுவரன் கோயில். |
| 4. புதன் | — | மதுரை, திருவெண் காடு |
| 5. வியாழன் | — | திருச்செந்தூர், ஆலங்குடி. |
| 6. வெள்ளி | — | கன்யாகுமரி, கஞ்சனூர், |
| 7. சனி | — | திருநள்ளாறு |
| 8. இராகு | — | திருநாகேசுவரம் |
| 9. கேது | — | திருக்காளத்தி |



## ஐந்து ஸ்படிகலிங்கத் தலங்கள்:

இவை ஆதிசங்கராச்சாரியர் ஸ்தாபிக்கப் பட்டனவாகப் பரவப்படுகின்றன. அவை:

| | தலம் | | இலிங்கத்தின் பெயர் |
|---|---|---|---|
| 1. | பத்ரிநாத் | — | முக்திலிங்கம் |
| 2. | நேபாளத்தில் உள்ள நீலகண்ட சேத்திரம் | — | பார லிங்கம் |
| 3. | சிதம்பரம் | — | மோட்ச லிங்கம் |
| 4. | சிருங்கேரி | — | போகலிங்கம் |
| 5. | காஞ்சிபுரம் | — | யோகலிங்கம் |

## விராட புருஷனுடைய ஆதார தலங்கள்:

| ஆதாரம் | ஆதார தலத்தின் பெயர் | ஆதாரக் கடவுள் |
|---|---|---|
| மூலாதாரம் | திருவாரூர் | விநாயகர் |
| சுவாதிஷ்டானம் | திருவானைக்கா | பிரம்மா |
| மணிப்பூரகம் | திருவண்ணாமலை | திருமால் |
| அனாகதம் | சிதம்பரம் | உருத்திரன் |
| விசுத்தி | திருக்காளத்தி | மகேசன் |
| ஆக்ஞை | காசி | சதாசிவன் |

(துவாதசாந்த தலம் — மதுரை)

## சிறப்புமிக்க தலங்கள்

| தலம் | | சிறப்பு |
|---|---|---|
| திருவாரூர் | — | பிறக்க வீடு தருவது |
| திருவண்ணாமலை | — | நினைக்கவீடு தருவது |
| சிதம்பரம் | — | வழிபட வீடு தருவது |
| திருமுதுகுன்றம் (விருத்தாசலம்) | — | இறக்க வீடு தருவது |

## காசிக்கு ஒப்பான தலங்கள் ஆறு;

1. திருவெண்காடு
2. திருவையாறு
3. திருமயிலாடுதுறை
4. திருவிடைமருதூர்
5. திருச்சாய்க்காடு
6. திருவாஞ்சியம்

## மருது தல மரமாக உள்ள தலங்கள்

மல்லிகார்ஜுனம் —(ஸ்ரீ சைலம்—ஆந்திர மாநிலம்)

மத்தியார்ஜுனம் — (திருவிடைமருதூர்)

திருப்புடார்ஜுனம் —(திருப்புடைமருதூர்]

## ஒரே நாளில் தொழ வேண்டிய தலங்கள்

''காலைக்—கடம்பர், மத்தியானம்—சொக்கர், அந்தித்—திருவேங்கி நாதர்.''

கடம்பர் —குழித்தலை (கடம்பந் துறை)

சொக்கர் —சிவாயமலை (வாட்போக்கி)

திருவேங்கி நாதர் —திருஈங்கோய்மலை (மரகதமலை]

## சப்தஸ்தான தலங்கள்

1. திருவையாறு
2. திருப்பழனம்
3. திருச்சோற்றுத்துறை
4. திருவேதிக்குடி
5. திருக்கண்டியூர்
6. திருபழந்துருத்தி
7. திருநெய்தானம்

## கும்பகோணம் கும்பேசுவரர் திருஉலா வரும் தலங்கள்

1. கும்பகோணம்
2. கலய நல்லூர்
3. வலஞ்சுழி
4. தாராசுரம்
5. சுவாமிமலை
6. கொட்டையூர்
7. மேலைக்காவிரி



## நவதிருப்பதிகள்

ஆழ்வார்திருநகரி —ஆதிநாதர் கோயில்
திருவைகுண்டம் —கள்ளபிரான் கோயில்
திருவரகுணமங்கை— விஜயாசனப் பெருமாள் கோயில்
திருப்புளிங்குடி —காய்சின வேந்தன் கோயில்
பெருங்குளம் —மாயக்கூத்தர் கோயில்
திருக்கோளூர் —வைத்த மாநிதிப் பெருமாள் கோயில்
தென்திருப்பேரை—மகர நெடுங்குழைக்காதர் கோயில்

இரட்டைத் திருப்பதிகள் [திருத்தொலைவிலி மங்கலம்] —
1. தேவபிரான் கோயில் (நின்ற திருக்கோயில்)
2. செந்தாமரைக் கண்ணன் கோயில் (விற்றிருந்த திருக்கோலம்)

## பஞ்சமூர்த்திகள்

1. சிவபெருமான்
2. பராசக்தி
3. விநாயகர்
4. முருகன்
5. சண்டேசுவரர்.

## சிவபெருமானின் மகேச வடிவங்கள்

1. சந்திரசேகர மூர்த்தி
2. உமாசகித மூர்த்தி
3. விருஷபாரூட மூர்த்தி
4. நிருத்த மூர்த்தி
5. கல்யாண சுந்தர மூர்த்தி
6. பிச்சாடன மூர்த்தி
7. காமதகன மூர்த்தி

8. காலாந்தக மூர்த்தி
9. திரிபுராந்தக மூர்த்தி
10. சலந்தராவத மூர்த்தி
11. கஜாரி மூர்த்தி
12. வீரபத்திர மூர்த்தி
13. சங்கரநாராயண மூர்த்தி
14. அர்த்தநாரீசுவர மூர்த்தி
15. கிராத மூர்த்தி
16. கங்காள மூர்த்தி
17. சண்டேசனுக்கிரக மூர்த்தி
18. விஷபாஹரண மூர்த்தி
19. சக்ரதான மூர்த்தி
20. விக்னேசுவர அனுக்கிரக மூர்த்தி
21. சோமாஸ்கந்த மூர்த்தி
22. ஏகபாத மூர்த்தி
23. சுகாசன மூர்த்தி
24. தட்சிணா மூர்த்தி
25. இலிங்கோற்பவ மூர்த்தி



## சிவபெருமானது 64 லீலா விக்கிரகங்கள்

1. இலிங்கம்
2. இலிங்கோற்பவர்
3. முகலிங்கம்
4. சதாசிவர்
5. மகாசதாசிவர்
6. உமாமகேசுவரர்
7 உமேசர்
8. சோமாஸ்கந்தர்
9. சந்திரசேகர்
10. விருஷ பாந்திகர்
11. விருஷபாரூடர்
12. புஜங்கலலிதர்
13. புஜங்கத்திராசர்
14. சந்தியா நிருத்தர்
15. சதா நிருத்தர்
16 காளிகா தாண்டவர்
17. கங்காவிசர்ஜனர்
18. திரிபுராந்தகர்
19 கல்யாண சுந்தரர்
20 அர்த்த நாரீசுவரர்
21. கஜாந்தகர்
22. ஸ்வரா பக்நர்
23. சார்த்தூலஹரர்
24. பாசுபதர்
25. கங்காளர்
26. பிச்சாடனர்



27. சிங்கஹரர்
28. சண்டேச அனுக்கிரகர்
29. தட்சணாமூர்த்தி
30. யோகதட்சணா மூர்த்தி
31. வீணாதர தட்சண மூர்த்தி
32. காலாந்தகர்
33. காமாரி
34. இலகுளீசுவரர்
35. பைரவர்
36. ஆபதோத்தாரர்
37. வடுகர்
38. சேத்திர பாலகர்
39. வீரபத்திரர்
40. அகோரர்
41. தட்சயக்ஞபங்கர்
42. கிராதர்
43. சற்குரு
44. அசுவாரூடர்
45. கஜாந்திகர்
46. ஜலந்தரவதர்
47. ஏகபாதர்
48. திரிமூர்த்தி திரிபாதர்
49. ஏகபாத திரிமூர்த்தி
50. கௌரி வரப் பிரதானர்
51. சக்ரதானர்
52. கௌரி லீலாதரர்
53. விஷாபரணர்
54. கருடாந்திகர்
55. பிரமசிரகண்டீசர்
56. கூர்ம சங்காரர்
57. மச்சாரி
58. வராஹாரி
59. பிரதானர்
60. ரக்தபிட்ஷா பிரதானர்
61. சிஷ்யபாவர்
62. சுகாசனர்
63. கங்காதரர்
64. கேசவார்தர் (அரிஹரர்)

## முருகனது சோடசமூர்த்தங்கள்

1. சக்திதரன்
2. கந்தன்
3. சேனாபதி
4. சுப்ரமணியன்
5. கஜவாகனன்
6. சரவணபவன்
7. கார்த்திகேயன்
8. குமரன்
9. சண்முகன்
10. தாரகாரி
11. கிரவுஞ்சபேதனன்
12. சேனானி
13. பிரமசாத்தா
14. சிகிவாகனன்
15. பாலசுவாமி
16. வள்ளி கல்யாண சுந்தரன்.



சைவ சமய பரமாச்சாரியர்கள் பிறந்த — தடுத்து ஆட்கொள்ளப்பட்ட, வீடுபேறு பெற்ற தலங்கள்.

### 1. திருஞானசம்பந்த நாயனார்

பிறந்த, தடுத்து
ஆட்கொள்ளப்பட்ட பதி —சீர்காழி
சிதம்பரம் கோயிலுள்
சென்றது —தெற்கு கோபுரம் வழியாக
முக்தி அடைந்த தலம் —ஆச்சாள்புரம்

### 2. அப்பர் பெருமான்

பிறந்த தலம் —திருவாமூர்
தடுத்து ஆட்கொள்ளப் பட்டபதி —திருவதிகை
சிதம்பரம் கோயிலுள் சென்றது —மேற்குக் கோபுரம் வழியாக
முக்தி அடைந்த தலம்—திருப்புகலூர்



### 3. சுந்தரமூர்த்தி சுவாமிகள்

பிறந்த தலம் —திருநாவலூர்
தடுத்து ஆட்கொள்ளப் பட்டபதி —திருவெண்ணை நல்லூர்
சிதம்பரம் கோயிலுள் சென்றது —வடக்குக் கோபுரம் வழியாக
முக்தி அடைந்தது —கைலாயம்

### 4. மணிவாசகப் பெருந்தகையார்

பிறந்த தலம் —திருவாதவூர்
தடுத்து ஆட்கொள்ளப் பட்ட தலம் —ஆவுடையார்கோயில் (திருப்பெருந்துறை)
சிதம்பரம் கோயிலுள் சென்றது — கிழக்குக் கோபுரம் வழியாக
முக்தி அடைந்த தலம்— சிதம்பரம்.

கோபுரத்தைக் காட்டிலும் உயர்ந்த விமானத்தை உடைய கலைச்சிறப்புமிக்க கோயில்கள் :

1. பிரகதீசுவரர் கோயில், தஞ்சாவூர்
2. கங்கை கொண்ட சோழீச்சரம், கங்கை கொண்ட சோழபுரம்
3. ஐராவதேசுவரர் கோயில், தாராசுரம்
4. கம்பேசுவரர் கோயில், திரிபுவனம்.

— — — —

# ஆத்தூர் வண்டி காளியம்மன்

**எஸ். ஜெயராமன், M.A., B.L.,**

ஆச்சாள்புரம்

திண்டுக்கல் அண்ணா மாவட்டம் வளங் கொழிக்கும், வற்றாது நீர் பாயும் ஆத்தூர் கிராமத்தின் காவல் தெய்வமாக ஊரின் மத்தியில் அமைந்திருக்கின்றது அருள்மிகு வண்டி காளியம்மன் திருக்கோயில். காவல் தெய்வம் ஊரின் மத்தியில். ஆம். கோவிலின் அமைப்பு, வழிபாட்டு முறை, வழிபடும் மக்கள், திருவிழா, அனைத்தும் பிற திருக்கோயிலிருந்து வேறுபட்டு சிறப்பாகவும் ஏற்படுத்தப்பட்டுள்ளது.

சுத்த சமய சன்மார்க்கவாதியான அருட்பா அருளிய ராமலிங்க அடிகளாரின் அனுபவம்:

''எவ்வகை நிலையும் தோற்றும் நீ நினக்குள் எண்ணிய படி யெல்லாம் எய்தும்''
என்பதாகும்.

திண்டுகல்லிலிருந்து வத்தலகுண்டு செல்லும் பாதையில் சுவை நிறைந்த பழங்களுக்கும் மணம் நிறைந்த மலர்களுக்கும் பெயர் பெற்ற செம்பட்டி சிறுநகருக்கும் அருகாமையில் ஆத்தூர் கிராமம் அமைந்துள்ளது. இக்கிராமத்தில் இந்து இனமக்களும், இஸ்லாமிய இன மக்களும். கிறித்துவ இன மக்களுடன் உற்ற சகோதரராய் இன மத மாச்சரியங்களுக்கு உட்படாமல் அமைதியாக வாழ்ந்து வருகின்றனர். இவர்கள் அனைவர்க்கும் பொதுவான வழிபாட்டு ஸ்தலமாகத்தான் வண்டி காளியம்மன் தெய்வம் ஒரு ஆண்டில் காளியம்மனாகவும் மறு ஆண்டில் முத்தாலம்மனாகவும் பெயர் கொண்டு அழைக்கப்படுகிறது.

எவ்வகை நிலையும் தோற்றம் என்பதற்கேற்றாற்போல் திருக்கோயிலின் பெயர் நிரந்தரமானதாக இருந்தாலும், கடவுளின் திருநாமம் ஆண்டுக்கு ஆண்டு மாற்றமான நிலையில் வழிபடப்பெறுகிறது.

### திருக்கோயில் அமைப்பு உள்ளும் புறமும்

ஆலயத்தின் வெளித்தோற்றம். இந்துக்கள் வழிபடும் திருக்கோயிலாக ராஜகோபுரத்துடன் காட்சி தருகிறது. மணிமண்டபம், மகா மண்டபம், அர்த்த மண்டபம் சருவறை அனைத்தும் அமையப் பெற்றுள்ளது. கருவறை விமானம் செப்புக்கலசத்துடன் விளங்குகிறது.

அர்த்தமண்டப அரண்காக்கும் வாயிலின் இருபுறமும் அழகிய சிற்பச்சிலைகளுக்குப்பதிலாகச் காட்டெருமையின் மிகப் பெரிய மண்டை ஓடுகள் கொம்புடன் வைக்கப்பட்டுள்ளது. பல தலைமுறைகளாக இவை இங்குதான் உள்ளன என வயது முதிர்ந்தோர் பெருமையாகப் பேசுகின்றனர். இறந்து போன அபூர்வ உயிர்களின் எச்சமான எலும்புகள் அருங்காட்சியகங்களில் வைத்துப் பாதுகாப்பது உண்டு; இத்திருக்கோயிலின் துவாரபாலகர்களாக துவம்சம் செய்யப்பட்ட மகிசாசுரனின் தலையோ என நினைக்கும்படியாக வைக்கப்பட்டுள்ளது.

### மூலவிக்கிரகம் இல்லாத கருவறை

இந்து திருக்கோயிலில் மூலவர் இல்லையேல் வழிபாடற்ற தலமாக கருதப்படுகிறது. இத்திருக்கோயிலில் கருவறை வெற்றிடமாக உள்ளது. வெற்றிடம் பள்ளிவாசல் தொழுகையை நினைவூட்டுகிறது. (முஸ்லீம் இன மக்கள் இதனால் மட்டுமே பெருமளவில் இத்திருக்கோவிலுக்கு வழிபாட்டில் உள்ளனர் எனக் கருத இயலாது. திருவிழாவின் போது முஸ்லீம்களின் பங்கு பிரதானமானதாக இருப்பதால் இக்கருத்து மாறுபடுகிறது.)

### இராமலிங்க அடிகள்

''நீ நினைக்குள் எண்ணியபடியெல்லாம் எய்தும்''
என்றவாறு எவர்எவர் எப்படி நினைத்து வழிபட்டாலும் அமைதி ஓங்கும் ஆனந்தம் பெருகும் என்பதற்கு எடுத்துக்காட்டாய் மூலஸ்தானத்தை வெற்றிடமாக வைத்து வழிபடுகின்றனர்.

### மும்மதத்திற்கும் பொதுவான திருவிழா

தான்ய அறுவடை முடிந்ததும் திருவிழா, கிராமம் மூன்றுகரைகளாக பிரிக்கப்பட்டு முஸ்லீம் இனத்தினர் ஒரு கரையாகவும் கிறித்து மக்கள் ஒரு கரையாகவும் இந்து மக்கள் ஒரு கரையாகவும் பொறுப்பேற்று திருவிழா ஏற்பாடுகள் கவனிக்கின்றனர். திருவிழா முதன் முதலில் தொடங்கப்பட்ட காலம் தெரியவில்லை. ஒரு ஆண்டு காளியம்மன் திருவிழாவாகவும் மறு ஆண்டு முத்தாலம்மன் திருவிழாவாக நடத்தப்படுகிறது. பத்து நாட்கள் நடை



பெறும் பெருந்திருவிழாவில் எருமை பலி கொடுப்பது வழக்கத்திலிருந்து தற்போது நிறுத்தப்பட்டுள்ளது.

## ஆண்டுக்கு பத்து நாட்கள் மட்டும் உருவ வழிபாடு

மதவேறுபாடின்றி அனைவரும் கூடித் திருவிழா ஏற்பாடுகளை ஆலயத்தின் முன்பு முடிவு செய்கின்றனர். திருவிழா முதல் நாள் கணபதி பூசாரி அடுத்த ஊரில் மண்ணெடுத்து அங்கேயே பயபக்தியுடன் உருவத்தை செய் கின்றார். இதற்காகத் தனி இடம் உள்ளது. பூசாரியின் பெயர் தலைமுறை தலைமுறையாக கணபதி என்றுதான் அழைக்கப்படும். அவ் விடத்தில் யாவரும் பார்க்காதவாறு உருவத் தினை உண்டு செய்து இரவு ஊர்வலமாக ஆல யத்திற்கு கொண்டு வரப்படுகிறது. இது முதல் மூன்று மதத்தைச் சார்ந்தவரும். 10 நாள் திருவிழா முடியும் வரை அம்மனுக்கு அணி விக்கப்படும் ஆபரணங்களைப் பாதுகாப்பதும் திருவிழாவில் கலகம் எதுவும் ஏற்படாதவாறு பாதுகாக்கின்றனர். திருவிழா முடிந்ததும் அம்மன் உருவத்தினைப் பூஞ்சோலை என்ற ஓர் தனி இடத்திற்கு கொண்டு சென்றுவைத்து விட்டு ஆலயம் திரும்புகின்றனர். பூஞ்சோலை யில் வைக்கப்பட்ட அம்மன் சிலை மழை, வெயில் இயற்கையால் கரைந்துபோகிறது. பத்து நாட்கள் திருவிழாவின்போது அம்மன் ஊர் வலத்தின் போது ஒவ்வொரு வீட்டிலும் இஸ் லாமியரானாலும் இந்துவானாலும் தங்கள் வீட்டில் திருக்கண் செய்கின்றார்கள். காவல் காப்பதற்காக சிறுதொகை ஊதியமாக வழங்கப் படுவதை மூன்று மதத்தினரும் உரிமையுடன் பிரித்து கொள்கின்றனர்.

## வளம் தரும் தைமகள்

**கவிஞர் பாக்கிய மணாளன்**

செவ்வந்திப் பூவிருக்கும்
செங்கரும்புச் சுவையிருக்கும்
செவ்வாழைப் பழமிருக்கும்
சீர்மிகுத் தையினிலே!

களமெல்லாம் பொலிவிருக்கும்
களிப்பெலாம் மிகுந்திருக்கும்
வளமெலாம் குவிந்திருக்கும்
வானுயர்த் தையினிலே!

புதுப்பொருள் புகுந்திருக்கும்
பழம்பொருள் சென்றிருக்கும்
புதுவாழ்வு மலர்ந்திருக்கும்
பூமகள் தையினிலே!

ஞாயிறுக்கும் வாழ்த்திருக்கும்
ஞானவழிப் புகழிருக்கும்
கோயிலுக்கும் சிறப்பிருக்கும்
கோடிபுகழ்த் தையினிலே!

எண்ணத்தில் நினைவிருக்கும்
எருதுக்கதில் பங்கிருக்கும்
வண்ணத்தில் அழகிருக்கும்
வடிவழகுத் தையினிலே!

பழவாழை இலையிருக்கும்
பாகுடன் பொங்கலிருக்கும்
உழவெலாம் பலனிருக்கும்
உலாவரும் தையினிலே!

---

இஸ்லாமிய மதத்தினரின் பள்ளிவாசல் கிறிஸ்துவ மதத்தினரின் புனித தேவாலயம் இந்துக்களின் சிவாலயம், திசைக்கு ஒன்றாக ஊரின் வெளிப்புறத்தில் தங்கள் தங்கள் வழிபாட்டிற்காகச் சிறப்புடன் விளங்குகிறது. மூவர்க்கும் பொதுவாக அருள்மிகு வண்டி காளியம்மன் ஊரின் மத்தியில் வழிபடப்படு வது சிறப்பம்சமாகும்.

அமைதி நிலவ ஆத்தூர் அம்மனை அனைவரும் வணங்கி அருள்பெறல் வேண்டும்.

---



# துருவன்

டாக்டர் **தேவகிபிரகாசம்**

மூன்று உலகங்களையும் கடந்து, சப்த ரிசிகளுடைய ஸ்தானத்தையும் தாண்டி, மேலானதாகப் பிரகாசிக்கும் விஷ்ணு பதத்தை அடைந்தவன் துருவன். கம்பத்தில் கட்டப்பட்டுள்ள பசு, அந்தக் கம்பத்தையே ஆதாரமாகக் கொண்டு சுற்றி வருவது போல, நவக்கிரகங்களும், நட்சத்திரக் கூட்டங்களும் துருவனையே ஆதாரமாகக் கொண்டு சுழன்று வருகின்றன. எட்டாத இடத்தில் பிரகாசமாக இருந்தபடி மூன்று உலகங்களிலும் உள்ளவர்களுக்கு ஒளிச் சுடராக விளங்கி வருகிறான். தமிழில் துருவ நட்சத்திரம் என்றும், ஆங்கிலத்தில் Polestai என்றும் அழைக்கிறார்கள்.

**பிறப்பும் இளமைப்பருவமும் ;**

சுவாயம்பு மனுவுக்குப் பிரியவிரதன், உத்தான பாதன் என்ற இரு பிள்ளைகள் பிறந்தனர். அவர்கள் இருவரும் நாராயணனுடைய அம்சமாதலால் அவர்கள் இப்பிரபஞ்சத்தையே மேன்மையோடு ஆண்டு வந்தார்கள்.

உத்தான பாதனுக்கு சுநீசி, சுருசி என்று இருமனைவியர் இருந்தனர் சுநீதிக்குத் துருவனும், சுருசிக்கு உத்தமனும் பிறந்தார்கள். உத்தான பாதனுக்குஇளைய மனைவியிடம்அதிகப் பிரியம். அவன் விருப்பப்படி நடந்து வந்தான். அவள் அதைத் தனக்குச் சாதகமாக வைத்துக் கொண்டு, அரசனுக்குப் பின் தன் மகனே பட்டத்துக்கு வரவேண்டும் என்று விரும்பினாள். மன்னனுக்கு மூத்த மனைவியிடம் வெறுப்பு உண்டாகும்படி அவன் மனத்தைக் கலைத்து வந்தாள். அதன் காரணமாக சுநீதியும், துருவனும் வெறுத்து ஒதுக்கப்பட்டனர். என்றாலும் அவர்கள் இருவரும் சகிப்புத் தன்மையுடன் காலங்கழித்து வந்தனர். ஒருநாள் உத்தான பாதன் அரியணையில் அமர்ந்திருந்தான். இளைய மகன் உத்தமனை மடியில் வைத்து சீராட்டிக் கொண்டிருந்தான். துருவன் தற்செயலாய் வந்தவன், தந்தையின் மடியில் போய் அமர்ந்தான். இதைக் கண்ட சுருசி விரைந்து வந்து அவனை இழுத்து அப்பால் தள்ளினாள். வெளியே போகுமாறு அதட்டினாள்.

''அப்பாவின் மடியில் உட்கார எனக்கு உரிமை இல்லையா!'' என்று துருவன் கேட்டான்.

''நீ என் வயிற்றில் பிறக்கவில்லை. போய் தவஞ் செய்து என் வயிற்றில் வந்து பிற. அப்போது அவர் மடியில் உட்காரலாம்'' என்று ஆணவமாகப் பதிலளித்தாள்.

துருவனுக்கு உள்ளத்தில் உறுதி உண்டாயிற்று. பகவானுடைய அருளைப் பெற முடிவு செய்தான். தாயிடம் சென்று நடந்தவற்றைக் கூறினான். மகனுடைய பிடிவாதத்தை மாற்ற இயலாது என்று அறிந்தாள். வாழ்த்தி விடை கொடுத்தாள். துருவன் அன்னையை வலம் வந்து பணிந்து, வனம் நோக்கி நடந்தான்.

வழியில் நாரதரைக் கண்டான் தன் கருத்தைத் தெரிவித்தான். 'குழந்தாய், நீயோ சிறுவன். காட்டில் புலி, சிங்கம் முதலிய கொடிய மிருகங்கள் வாழ்கின்றன. அவற்றால் உனக்குத் துன்பங்கள் உண்டாகும். பேசாமல் வீட்டுக்குத் திரும்பிச் செல்'' என்று தடுத்துப் பார்த்தார்.

''சுவாமி, என்னைத் தடுக்காதீர்கள். நான் பரந்தாமனைப் பார்க்காமல் திரும்ப மாட்டேன். என்னை வாழ்த்தி அனுப்புங்கள்'' என்று துருவன் வேண்டினான். அவனுடைய மன உறுதியைக் கண்டு, 'துருவா! யமுனை நதி தீரத்திலுள்ள மதுவனத்தில் பகவான் நாராயணன் நித்தியவாசம் செய்கிறார். அங்குச் சென்று அவரை நோக்கித் தவஞ்செய். அவர் உனக்குக் காட்சி தருவார். உயர்ந்த நிலையை அடைவாய்'' என்று நாரதர் வாழ்த்துக் கூறினார்.

துருவன் அவரை வலம் வந்து வணங்கி தவஞ் செய்யச் சென்றான். நாரதர் அச்செய்தியை உத்தானபாதனுக்குச் சொல்லிச் சென்றார்.



## தவநிலை

துருவன் மதுவனத்திற்கு வந்து சேர்ந்தான். யமுனையில் நீராடினான். பகவானைத் தியானித்து தவம் மேற்கொண்டான். மூன்று நாட்களுக்கு ஒருமுறை காட்டில் கிடைக்கும் பழங்களை உண்டு. பகவானை ஒரே மனதுடன் தியானித்து வந்தான். இவ்வாறு பல மாதங்கள் கடந்தன. காற்றையே உணவாகக் கொண்டான். மூச்சினை அடக்கி சமாதி நிலையில் இருந்தான். வனவிலங்குகள் அவனை நெருங்கவில்லை. தவம் கடுமையாயிற்று. பகவான் நாராயணன் அவன்முன் தோன்றினார்.

'துருவா' என்று அழைத்தார். கண் திறந்து பார்த்தான். சங்கு சக்ர கதாதாரியாய் கிரீட குண்டலங்களுடன் மார்பில் கௌஸ்துபம் தவழ மகாலட்சுமியுடன் எதிரே நிற்பதைக் கண்டான். அவரை வலம்வந்து வணங்கினான் துதி பாடினான். சகல சாஸ்திரங்களையும் உணர்ந்தவன் ஆனான். 'பிறவிப் பெருங் கடலைக் கடக்க அருள் புரிய வேண்டும்'' என்று வேண்டினான்.

'குழந்தாய்; உன் விருப்பம் நிறைவேறும். என்னிடம் நிலையான பக்தியோடு பல்லாண்டுகள் இவ்வுலகை ஆட்சி செய். பின்னர் நீ வான மண்டலத்தில் எவராலும் அடைய முடியாத பதத்தை அடைந்து, சூரியன் முதலான கிரகங்களாலும் அசுவனி முதலான நட்சத்திரங்களாலும், சப்த ரிசிகளாலும் வலம் வந்து வணங்கப்படப் போகிறாய்' என்று அருளி மறைந்தார்.

## நாடு திரும்பியது

துருவன் தவத்தில் வெற்றி பெற்று,' இறையருளோடு நாடு திரும்பினான். இச் செய்தி நகரெங்கும் பரவியது. சுநீதி மகனைக் காண ஓடி வந்தாள். மகனை ஆரத் தழுவி முத்தமிட்டாள். நகர மக்கள் நகரை அலங்கரித்தனர். மன்னன் எதிர்கொண்டழைத்தான். எங்கும் ஆனந்தம்; ஆரவாரம், துருவனை யானைமீதேற்றி நகர் வலம் வந்தனர். அரண்மனைக்கு உரிய முறையில் அழைத்துச் சென்றனர்.

நாட்கள் பல கடந்தன உத்தானபாதன் ஒரு நல்ல நாளில் துருவனுக்கு முடிசூட்டினான். அனைவரிடமும் விடைபெற்று, காட்டில் தவஞ் செய்யச் சென்றான். துருவன் இரு மனைவியரை மணந்து நல்லாட்சி நடத்தினான். உத்தமன் மணம் செய்து கொள்ளவில்லை. தன் அண்ணனுக்குச் சேவை செய்து வந்தான். அரச போகங்களில் பற்றுக் கொள்ளவில்லை.

## விஷ்ணு பதம்

துருவன் குடிமக்களிடம் அன்புகொண்டு பல்லாண்டு ஆட்சி புரிந்தான். பின்னர் தன் மகனுக்கு முடிசூட்டி, ஆட்சிப் பொறுப்பை அவனிடம் ஒப்புவித்தான். பாச பந்தங்களிலிருந்து விடுபட்டு, பத்ரிகாசிரமத்திற்கு வந்து சேர்ந்தான்.

மனத்தை ஒரு நிலைப்படுத்தி பரந்தாமனைக் குறித்து, தியானத்தில் அமர்ந்தான். வானிலிருந்து ஒளிமயமான விமானம் ஒன்று வந்திறங்கியது. அதில் வந்த தேவ புருஷர்கள்



துருவனை உபசரித்தார்கள். துருவன் விமானத்தில் ஏறி அமர்ந்தான். தேவர்கள் மலர் மாரி பொழிந்தார்கள். தேவ துந்துபி முழங்கியது. விமானம் வானத்தில் எழுந்தது. துருவன் தேவ லோகம் செல்வதைத் தாயாரும் கண்டாள்.

துருவன் விஷ்ணு பதத்தை அடைந்தான். வடதிசையிலிருந்து கொண்டு, ஒளிச்சுடராக விளங்கி வருகிறான். நவக்கிரகங்களும், நட்சத்திரங்களும், சப்த ரிசிகளும் அவனை வலம் வருகின்றனர்.

---

# சாமியே சரணம் ஐயப்பா

செவ்வேள்



ரம்பன் என்ற அரக்கனின் மகனான மகிஷாசூரனை ஆதிபராசக்தி வதைத்த வைபவமே நவராத்திரி விழாவாகக் கொண்டாடப்படுவதை நாம் அறிவோம். அந்த அரக்கன் ரம்பனின் உடன் பிறந்தவனான கரம்பனின் மகளே மகிசி என்ற அரக்கி ஆனாள்.

இம்மகிசி பிரம்மனை நோக்கிக் கடும்தவம் புரிந்தாள். 'அரிக்கும் அரனுக்கும் பிறக்கும் புத்திரனால் அன்றி வேறு எவராலும் தனக்கு மரணம் கூடாது'' என்று மகிசி வேண்ட பிரம்மாவும் அவள் வேண்டிய வரத்தைத் தந்து விட்டார்.

மகிசியை வதைக்கவல்ல அரிஹரசுதனையே பாற்கடலைக் கடைந்த காலத்து மோகினியாக வடிவெடுத்துத் திருமாலுடன் இணைந்து சிவபெருமான் தோற்றுவித்தருளினார்.

அப்பொழுது பந்தளநாட்டை ஆண்டு வந்த சிவபெருமானின் பரமபக்தனான இராஜசேகரப் பாண்டியன் தமக்குப் புத்திரபேறு வழங்குமாறு சதா வேண்டி வந்தான். அவனது பிள்ளை இல்லாக் குறையைப் போக்கிடச் சிவபெருமான் 'கழுத்தில் மணிமாலையோடு அவதரித்த ''மணிகண்டனை'' மன்னன் காணுமாறு பம்பா நதிக்கரையில் விட்டுச் சென்றான்.

வேட்டையாட வந்த பந்தள மன்னன் குழந்தையைக் கண்டெடுத்து, தன் அரண்மனைக்கு அழைத்துச் சென்று 'மணிகண்டன்' எனும் திருநாமம் சூட்டி மட்டிலா மகிழ்ச்சியோடு வளர்த்து வந்தான்.

மணிகண்டனுக்குக் கல்வி கற்பித்த அரசகுரு மணிகண்டனுடைய தெய்வாம்சத்தைப் புரிந்து கொண்டு, தம் ஊமையும், குருடுமான பிள்ளையின் குறை தீர்த்தருள வேண்ட அவ்விதமே அருள் புரிந்தான் மணிகண்டன்.

மணிகண்டன் இவ்வாறு வளர்ந்து வரும் நாளில் பந்தள நாட்டு அரசிக்கு ஆண்மகவு ஒன்றும் பிறந்தது. அக்குழந்தையும் 'இராஜராஜன்'' எனும் பெயரோடு வளர்ந்து வந்தது.

மணிகண்டன் வளர்ப்பு மகனே ஆன போதும் இராஜசேகர பாண்டியன் அவன்பால் மட்டில்லா பாசம் கொண்டு வளர்த்து வந்தான். என்றாலும் குணக்கேடனான மந்திரி அரசியின் மனதைக் கலைத்து, 'பெற்றமகன் இருக்க வளர்ப்பு மகனா வருங்காலத்தில் நாடாள்வது? அவனைக் கொன்று விடுவதே மேல். தங்களுக்குத் தலைவலி, அதற்கு புலிப் பால் கொண்டு வர வேண்டும் என்று கூறி மணிகண்டனைக் காட்டிற்கு அனுப்பி வைத்தால் புலிக்கு அவன் பலியாகி விடுவான்'' என்று உபாயம் கூற, அரசியும் அதற்கு இணங்கித் தனக்குத் தீராத தலைவலி வந்துறுற்றதைப் போல் நடித்தாள்.

மகிசியை வதைக்கும் தன் அவதார நோக்கம் நிறைவேறும் தருணம் இதுவே எனக் கருதிய மணிகண்டனும் அரண்மனையைவிட்டுத் தனி ஒருவனாக உற்சாகத்தோடு கிளம்பி முதலில் தேவலோகம் சென்றான். மகிசியுடன் போர் புரிந்து அவளைப் பூலோகத்தில் அழுதா நதிக்கரையில் விழுமாறு தள்ளினான்.

மகிசியின் மார்புமீது நின்று மணிகண்டன் ஆடிய தாண்டவத்தைக் கண்டு சிவபெருமான் திருமால் மற்றுமுள்ள தேவர்களும் மகிழ்ந்தார்கள். மகிசியும் தன்மீது தாண்டவமாடுபவன் அரிகரபுத்திரனே என்பதை அறிந்து மணிகண்டனை வணங்கி வழிபட்டு உயிர் நீத்தாள். அதனால் முன் பிறவியில் காலன் என்ற முனிவருக்கு லீலா என்ற மகளாகப் பிறந்தவளான மசிசியின் சாபம் நீங்குமாறும், சபரிமலையில் மாளிகைபுரத்து அம்மனாக அவளுக்குக் கோயில் ஏற்படுமாறும் அருள் புரிந்தார் மணிகண்டர்.

இவ்வாறு தம் அவதார நோக்கத்தை நிறைவேற்றிக் கொண்ட மணிகண்டர் தேவேந்திரனை ஆண்புலியாகவும், தேவலோகத்து மாதர்களைப் பெண்புலிகளாகவும் மாற்றி, ஆண்புலியின் மீது ஏறி அமர்ந்து பந்தளநாட்டிற்குத் திரும்பி வந்தார்.

கண்டவர் நடுங்கும்படியாக புலிகளுடன் வந்து சேர்ந்த மணிகண்டர் 'தந்தையே! வேண்டுமட்டும் புலிப்பாலைக் கறந்து

அன்னையைக் குணப்படுத்த ஆவனச் செய்யுங்கள்' என்று கூற, மணிகண்டனின் மகத்துவத்தை அறிந்த அரசியும் மந்திரியும் அவர் திருவடிகளில் விழுந்து மன்னிப்பைக் கோரினர்.

மகிசியின் வதம் காரணமாகவே அவதரித்த அரிகரகதனும் அவர்களை மன்னிக்குமாறு மன்னனை அறிவுறுத்தித் தாம் தேவலோகம் மீள அனுமதிக்குமாறு வேண்டினார். அப்போது மணிகண்டனின் பிரிவைத் தாங்கிக் கொள்ள முடியாத மன்னன் 'எனக்கு ஒரு வரம் தரவேண்டும், ஐயனே! உன் நினைவாக ஒரு கோயில் கட்டுவேன். அங்கு நீ எழுந்தருள வேண்டும்' என்று வேண்ட தெய்வங்களுக்கெல்லாம் தெய்வமாய் சைவ, வைணவ ஒற்றுமையை நிலைநிறுத்த வந்த ஐயப்ப சுவாமியும் அதற்கு இசைந்து தாம் இருந்த இடத்திலிருந்து அம்பு ஒன்றினை எய்து அவ்விடத்தில் கோயில் கட்டுமாறு கூறி மறைந்து விட்டார். ஐயப்ப சுவாமி எய்த அம்பு இராமபிரானுடைய பக்தையான சபரி வாழ்ந்த சபரிமலையில் விழ அவ்விடத்திலேயே ஐயப்பனுக்குப் பந்தள மன்னனும் கோயில் கட்டி வணங்கி வழிபட்டான்.



பந்தள மன்னன் அகத்திய முனிவரின் ஆலோசனைப்படியே 18 படிகளுடன் கட்டிய ஐயப்பன் ஆலயத்திற்கே இலட்சக்கணக்கான பக்தர்கள் ஆண்டுதோறும் வந்து வழிபட்டு நலம் பெற்று வாழ்ந்து வருகிறார்கள்.

சபரிமலையிலுள்ள ஐயப்ப சுவாமியின் ஆலயம் காசிக்கு ஒப்பான புண்ணியம் உடையதாகும். இதன் அருகே ஓடும் பம்பாநதி கங்கைக்கு ஒப்பாகபுனிதம் வாய்ந்ததும் ஆகும்.

ஐயப்பன் மலைக்குச் செல்வோர் சுவாமியின் கட்டளையின்படி கார்த்திகை முதல் நாளன்றோ அல்லது அதற்குப் பின்வரும் ஒரு மங்கல நாளிலோ மாலை அணிந்து உள்ளும் புறமும் தூய்மை உடையவராய், ஒருவருக்கும் தீமை எண்ணாது உயர்ந்ததையே சிந்தித்து, உயர்ந்த ஒழுக்கங்களையே கடைப்பிடித்து, காலை மாலை இருவேளைகளிலும் குளித்து, ஒரு முறை புசித்து 41 நாட்கள் கடுமையாக விரதம் அனுசரிக்க வேண்டும்.



மணிகண்டன் மகிசியை வதைக்கப் புறப்பட்டபோது மன்னன் முக்கண் தேங்காயையும், பட்சணங்களையும் கொடுத்தனுப்பியதன் நினைவாக பக்தர்களும் ஐயப்பனின் பூஜைக்குரிய நெய் நிரப்பிய தேங்காய் மற்றும்பூஜைப் பொருட்கள் அடங்கிய ஒரு முடியும், நடந்து செல்லும் வழியில் தேவைப்படும் உணவுப் பொருள்கள் அடங்கிய மற்றொரு முடியுமாக இருமுடி தாங்கிச் செல்ல வேண்டும்.

இதுவே இக் கோயிலுக்குச் செல்வார் மேற்கொள்ள வேண்டிய விதிமுறைகளாகும்.

''இருமுடி தாங்கி ஒரு மனதாகி

குருவெனவே வந்தோம்

இருவினை தீர்க்கும் எமனையும் வெல்லும்

திருவடிக் காண வந்தோம்.''

எனப் பாசமுடன் பாடி, ஐயப்பன் கோயில் கொண்ட சபரிமலையை நாடி, பக்தியோடு வழிபட்டு வரும் அடியார்கள் ஐயப்பசுவாமிகள் அருளால் எல்லா நலன்களும் வளங்களும் நிறைந்து மங்களமாக வாழ்வர் என்பது திண்ணம்.

சாமியே சரணம் ஐயப்பா!

---



# வைகுண்ட ஏகாதசி

அருட்செல்வி

ஏகாதசி என்பது ஓர் உத்தம புண்ணிய காலம். பரமாத்மாவுக்குப் பரமப் பிரியமான திதி அது. அதைப் போற்றாத புராணமில்லை. அதை துதிக்காத தர்ம நூலில்லை. ஆறு முதல் அறுபது வயது வரையிலுள்ளோர் அனைவரும் அதை அவசியம் அநுஷ்டிக்க வேண்டுமென பகவான் ஆணையிட்டார். கங்கையைவிட சிறந்த தீர்த்தமில்லை. விஷ்ணுவை விட உயர்ந்த தேவரில்லை. தாயிற் சிறந்ததோர் கோயிலுமில்லை. காயத்ரீயைவிட உயர்ந்த மந்திரமில்லை. ஏகாதசியைவிட சிறந்த விரதமில்லை என ஒருமிக்கப் பதினெண் புராணங்களும் அதை போற்றுகின்றன. அத்தகைய ஏகாதசி எப்படி உண்டானது!



கிருதயுகத்தில் முரன் என்றோர் அரக்கன் இருந்தான். அவன் மிகக் கொடியவன். பலசாலி. தேவர்களையும் அவரைப் போற்றும் அந்தணரையும் வருத்தி வந்தான். இந்திரன் அவனுக்குப் பயந்து சொர்க்கத்தை விட்டு ஓடினான். கைலாயஞ் சென்று சிவனைச் சரணடைந்தான். அவர் பரிபாலன கர்த்தாவான பரந்தாமனிடம் செல் என்றார். தேவராஜன் பாற்கடலையடுத்து திருமாலை வணங்கித் துதித்தான். அவனது கருத்திற்கிசைந்து கருடத்வஜன் போர்க்கோலம்கொண்டு கிளம்பினார். அமரரனைவரும் உடன் சென்றனர். முரன் அரக்கர் படையுடன் போருக்கு வந்தான். சக்கரபாணி சக்ராயுதத்தால் அசுர சேனை அனைத்தையும் அழித்தார். முரன் அதைக் கண்டு வீராவேசங்கொண்டு எழுந்தான். தான் ஒருவனாகவே இருந்து அமரர் படையைப் புறங்காட்டி ஓடும்படி அடித்தான். முரனும் முராரியும் ஆயிரம் ஆண்டு சமர் புரிந்தனர். முரனது சக்தியைக் கண்டு விஷ்ணு வியந்தார். தான் சளைத்தவர் போல் பயந்து பத்ரிகாச்சிரமம் சென்றார். சிம்மவதி என்ற குகையைக் கண்டார். அது பன்னிரண்டு யோஜனை தூரம் விசாலமானது. அதனுள்ளே சென்று திருமால் பள்ளி கொண்டார். அசுரனும் அவரைப் பின் தொடர்ந்து சென்றான். உறங்கும் புருஷோத்தமனைக் கொல்லக் கருதி வாளை உருவினான். திருமாலின் உடலிலிருந்து ஒரு கன்னிகை உதித்தாள். முரனைப் போருக்கழைத்தாள். அரக்கன் அம்பு எடுக்கு முன்பு அம்பிகை ஓர் ஊங்காரம் செய்தாள். முரன் ஓர் பிடி சாம்பலாகிக் கீழே விழுந்தான். உடனே பரமனும் நித்திரை விட்டெழுந்தார். தன்னுடலிலிருந்து கிளம்பினசக்தியைக் கண்டு வியந்தார். அவள் செய்த வேலையை கொண்டாடினார். ஏகாதசி என அவளுக்கு நாமம் சூட்டினார். அவள் பிறந்த தினத்திலே உபவாசமிருந்து தன்னைப் பூஜிப்போருக்கு வைகுண்டம் அளிப்பதாக வாக்களித்தார். ஏகாதசி அநுஷ்டானம் செய்வோருக்கு இம்மை சுகம், மறுமை சுகம், கீர்த்தி, செல்வம், ஆரோக்யம் முதலியன உண்டாகும் என்றார். அது மார்கழி மாதம் கிருஷ்ணபட்சத்தில் உதித்ததால் அதற்கு உற்பத்தி ஏகாதசி என்று பெயர் உண்டாயிற்று. அன்று விதிப்படி உபவாசமிருந்து பரமனைப் பூஜிப்போர் பரமபதமடைவர். இம்மையிலும் கோரிய பயனைப் பெறுவர்.

மார்கழி மாதம் சுக்ல பட்ச ஏகாதசிக்கு மோட்ச ஏகாதசி என்று பெயர். பகவான் மாதங்களில் மார்கழி மாதமாயிருக்கிறார். அதனால் இந்த மாத சுக்லபட்ச ஏகாதசியே மிகச் சிறந்ததாகும். இதை பெரிய ஏகாதசி என்றும் வைகுண்ட ஏகாதசி என்றும் கூறுவார்கள். அச்சமயம் அச்சுதனை அர்ச்சிப்போர் வைகுண்டம் செல்வர். மோட்சம் அடைவர். அவர்களது மூதாதைகளும் முத்தி பெறுவர்.

# மறைமலை அடிகளின் கடவுள் சிந்தனை

திருமதி உமா ராசன்

தமிழ் உலகின்கண் தனித்தமிழ் நடையைக் கொண்டு வந்தவர் மறைமலையடிகள். அவர்தம் கருத்துக்கள் இன்றைய சமுதாயத்திற்கு வேண்டிய ஒன்றாகும்.

தமிழ் நம் மக்களை அறிவில் மேம்பட்டு விளங்கச் செய்தது எப்படி என்றார். இந் நிலவுலகத்தில் எங்கும் உள்ள எல்லா மக்களும் அவர்கள் நாகரிகத்தின் சிறந்து இருப்பினும், நாகரிகம் இல்லாக் காட்டு வாழ்க்கையிலிருப்பினும், எல்லாரும் 'கடவுள் ஒருவன் உண்டு' என்னும் உணர்ச்சியும் அக்கடவுளை வணங்கும் விருப்பமும் உடையவராய் இருக்கின்றனர். மக்கட்பிரிவினர் எல்லாருடைய வரலாறுகளையும் மிக நுணுக்கமாக ஆராய்ந்து வரலாற்று நூல்கள் எழுதியிருக்கும் ஆங்கில ஆசிரியர்கள் 'கடவுளுணர்ச்சியில்லா ஒரு மக்கட் கூட்டத்தாரை ஓரிடத்தும் காண்டல் இயலாது' என்று முடிவு கட்டிச் சொல்லுகின்றார்கள். ஆகவே கடவுளுணர்ச்சியும், கடவுள் வணக்கமும் இல்லாமல் மக்களாய்ப் பிறந்தவர்கள் உயிர் வாழ்தல் இயலாதென்பது இனிது விளங்கும்.

மக்கள் எல்லோரும் ஏன் இங்ஙனம் கடவுளை வணங்கியும், கடவுள் வணக்கமும் உடையவராயிருக்கின்றனர் என்றால் வியப்பான இந்த உடம்பையும், இந்த உலகத்தையும் இந்த உலகத்துப் பொருள்களையும், மக்கள் தாமாகவே உண்டாக்கிக் கொள்ள வல்லவர்களாய் இல்லை. ஆகவே இத்தனை வியப்பான அண்டங்களைத் தமக்கு ஆக்கிக் கொடுக்கத் தக்க பெருவல்லமை உள்ள ஒரு முழுமுதற் கடவுள் கட்டாயம் இருக்க வேண்டும் என்ற உணர்ச்சி அனைவர் உள்ளங்களிலும் இயற்கையாகவே தோன்றா நிற்கின்றது.

விருப்பு வெறுப்பு இல்லாக் கடவுள், தன்னை மக்கள் வணங்க வேண்டுமெனவும் தனக்குத் திருக்கோயில்களும், திருவிழாக்களும் வேண்டுமெனவும் விரும்புவரோ என வினவிச் சிலர் நம்மனோரை ஏளனம் செய்கின்றனர். கடவுள் தம்மை மக்கள் வணங்கத் வேண்டுமெனத் தமது திருவுள்ளத்தில் கருதுவது அதனால் அவர் தமக்கு ஒரு பெருமை தேடிக் கொள்வதற்கு அன்று.

கடவுள் ஒப்புயர்வு அற்றவர்; அவரை வணங்காது ஒழியின் நமக்குத் தீங்குண்டாம்' என்னும் அளவே கருதி, அவரை அச்சத்தால் வணங்குவோர் தாழ்ந்த நிலையினராவர். அன்பு, இரக்கம் உடையவன் இறைவன் எனக் கருதி அவனை அன்பினால் வணங்குவோர் உயர்ந்த நிலையினர். எல்லாவற்றையும் படைத்த இறைவனின் செய்கையினை உற்றுநோக்கும் நுண்ணறிவாளர், அவன் அண்டம் முதலான அனைத்தும் செய்திருப்பது ஒரு சிறந்த நோக்கம் பற்றியேயல்லாமல் வேறன்று என உணர்வர். அச்சிறந்த நோக்கம் யாதென்றால், இயற்கையாய் உள்ள அறியாமையுந் துன்பமும் களைந்து, என்றும் அழியாப் பேரின்பத்தில் நாம் நிலை பேறாயிருக்க வேண்டுமென்பதே.

எள்ளுக்குள் எண்ணெய்போல எங்கும் பிரிவற நிறைந்து விளங்கும் இறைவனை அவ்வறிவு வடிவாகவே நினைந்து வணங்காமற் கல்லினாலும், உலோகத்தாலும் உருவாக்கப்பட்ட உயிர் அற்ற வடிவங்களில் வைத்து வணங்குவது குற்றமாகாதோவெனிற் குற்றமாகாது. சிறு குழந்தையாய் இருந்த காலத்திலே தன் பெற்றோரைப் பிரிந்து நெடுந்தொலைவில் ஓர் இடத்தில் பிறரால் வளர்க்கப்பட்ட ஒரு சிறுவன் ஆண்டு முதிர முதிர, அறிவும் முதிர்ச்சிப் பெற்றவனாய்த் தன் தாய் தந்தையரைக் காண விரும்பியபோது, அவனை வளர்த்து வந்தவர், அவன் தாய்தந்தையர்தம் ஓவியத்தைக் காட்ட அவன் அதில் அவர்களைக் கண்டு வணங்கி அகம் மகிழ்தல்போல, எல்லையின்றி எங்கும் நிறைந்த இறைவனைப் பிரிந்து அவனது திருவருள் தம்மைக் காணமாட்டாமல் அறியாமையில் கட்டுண்டு கிடந்து நம்மனோர்க்குச் சிறிது சிறிதாக அறிவை விளங்கச் செய்துவரும் கடவுள் பற்று மிக்க நம்மூதாதையர், நமது அவாவினை அறிந்து தாம் கண்டதாம் ஐயன் வடிவைக் கல்லிலும், செம்பிலும் அமைத்துக் காட்ட அதனை நாம் வணங்கி அதன் வழியே நம் ஐயனை அறிந்தவர்களாய் அகங்கசிந்து வருகிறோம். எவரெவர் எவ்வெவ்வுருவிற் கடவுளரை வழிபடினும் அவரவர்க்கு அவ்வவ் வுருவிற்கேற்பக் கடவுள் தமது அருளை வழங்குவார் என்பது திண்ணம். இவ்வாறு மறைமலையடிகள் தெளிவுபடுத்தியுள்ள கடவுள் சிந்தனைலை உணர்ந்து நாம் உருவவழிபாடு வாயிலாக மேலான பரம் பொருளை உணர்ந்து உய்வு பெறுவோமாக.




# அரிது, அரிது மனிதப் பிறவி.

*

# அறிவு அறிவு இறைவனை அடைதல்.

**சீலத்திரு மயிலை சிவஞான ஜோதி சிவசக்தி அம்மையார்**

ராகம் :— ஆபேரி   தாளம் :— ஆதி

**பல்லவி**

அரிது அரிது மனிதப் பிறவி
அறிவு அறிவு இறைவனை அடைதல்

**அனுபல்லவி**

எளிது எளிது பரமனை அடைவது
புதிது புதிது பக்தியின் மகிமை (அரிது)

**சரணம்—1**

அன்பைக் காட்டி அழகாய் பேசி
ஆனந்தமாக ஆண்டவன் நினைவாய்
இல்லற வாழ்வினில் இன்முகத்துடனே
ஈசன் புகழைப் பாடிப் பாடி

உண்மை பேசி உலகம் புகழ
ஊரும் புகழ ஊக்கத் தோடு
எல்லோரும் புகழ எளிமை யோடு
ஏமாறாமல் ஏமாற்றாமல்

ஐந்தெழுத் தோதி ஐயம் அகன்று
ஒன்றே குலம் என ஒற்றுமையுடனே
ஓங்கும் புகழுடன் ஓங்கி உயர்ந்து
ஔவைப் போலே அறிவினை வளர்த்து

எக்கணமும் இறைவன்திருவடி பணிந்தால்
எக்கணமும் அருள் அள்ளித்தருவான்
பக்கத் துணையாய்க் கண்ணாய் வருவான்
தக்கத் தருணத்தில் திருவடித் தருவான்
(அரிது)

**சரணம்—2**

அன்னை உணர்வாய் அன்பு உள்ளத்துடன்
ஆனந்தமாக ஆர்வ முடனே
இரக்க குணமாய் இதயக் கோயிலில்
ஈர்த்து ஈர்த்து ஈசனை ஈர்த்து
உடையவனைத்தன் உள்ளத்தில்உணர்ந்து
ஊராம் இதய ஊரில் இருத்தி
எட்டாக் கனியை எட்டிப் பிடிக்க
எட்டா இறைவனை எட்டிப் பிடிக்க
ஏறு மயிலாம் (தூய) மனதினில் ஏறு

ஐங்கரன் தந்தையை ஐந்தெழுத்தானை
ஒட்டியும் எட்டாத, எட்டியும் ஒட்டாத
ஓங்கார இறைவனை ஓங்கார ஜோதியை
ஔஷதமாகவே கண்டிடணும்

எக்கணம் ஜோதியைக் கண்டனையோ—
அதில்
அக்கணமே நீயும் கலந்திடணும்
பக்கத் துணையாம் தாயுடன் மருவி
தக்கத் தருணத்தில் மறைந்திடணும்
(அரிது)

# திருநீற்றுப் பதிகத்தின் சிறப்பு

முத்து விழா கண்ட ஓதுவார் திருவையாறு அ, வடிவேல் பிள்ளை

**மதுரை கூன்பாண்டியனின் வெப்பு நோய் தீர திருஞானசம்பந்தர் அருளிய திருநீற்றுப் பதிகம், இன்றும் அடியவர் போற்றும் ஒப்பற்ற ஒரு பதிகமாகும். இப் பதிகத்தைப் பாடி நோயுற்ற அடியவர்க்குத் திருநீறு பூசி திருவாலவாயானைச் சிந்தித்தால் உடன் பலன் உண்டாவது திண்ணம் என்று கூறுகின்றார் இவர்.**

பண்—காந்தாரம்

மந்திரமாவது நீறுவானவர்மேலது நீறு
சுந்தரமாவது நீறுதுதிக்கப்படுவதுநீறு
தந்திரமாவது நீறுசமயத்திலுள்ளதுநீறு
செந்துவர்வாயுமைபங்கன்திருவால
வாயான்திருநீறே 1

வேதத்திலுள்ளதுநீறுவெந்துயர்தீர்ப்பதுநீறு
போதந்தருவதுநீறுபுன்மைதவிர்ப்பதுநீறு
ஓதத்தகுவதுநீறுஉண்மையிலுள்ளதுநீறு
சீதப்புனல்வயல்சூழ்ந்ததிருவாலவாயான்திரு
நீறே. 2

முத்திதருவதுநீறுமுனிவரணிவதுநீறு
சத்தியமாவதுநீறு தக்கோர்புகழ்வதுநீறு
பத்திதருவதுநீறு பரவவினியதுநீறு
சித்திதருவதுநீறு திருவாலவாயான்திருநீறே. 3

காணவினியதுநீறுகவினைத்தருவதுநீறு
பேணியணிபவர்க்கெல்லாம்பெருமைகொடுப்
பதுநீறு
மாணந்தகைவதுநீறுமதியைத்தருவதுநீறு
சேணந்தருவதுநீறுதிருவாலவாயான்திரு
நீறே. 4

பூசவினியதுநீறுபுண்ணியமாவதுநீறு
பேசவினியதுநீறுபெருந்தவத்தோர்களுக்
கெல்லாம்
ஆசைகெடுப்பதுநீறுஅந்தமதாவதுநீறு
தேசம்புகழ்வதுநீறுதிருவாலவாயான்திரு
நீறே 5.

அருத்தமதாவதுநீறுஅவலமறுப்பதுநீறு
வருத்தந்தணிப்பதுநீறுவானமளிப்பதுநீறு
பொருத்தமதாவதுநீறுபுண்ணியர்பூசும்
வெண்ணீறு
திருத்தகுமாளிகைசூழ்ந்ததிருவால
வாயான்திருநீறே. 6

எயிலதுஅட்டதுநீறுஇருமைக்குமுள்ளதுநீறு
பயிலப்படுவதுநீறுபாக்கியமாவதுநீறு
துயிலைத்தடுப்பதுநீறுசுத்தமதாவதுநீறு
அயிலைப்பொலிதருசூலத்தாலவாயான்திரு
நீறே. 7

இராவணன்மேலதுநீறு எண்ணத்தகுவதுநீறு
பராவணமாவதுநீறுபாவமறுப்பதுநீறு
தராவணமாவதுநீறுதத்துவமாவதுநீறு
அராவணங்குந் திருமேனி ஆலவாயான்திரு
நீறே. 8

மாலொடயனறியாதவண் ணமுமுள்ளதுநீறு
மேலுறைதேவர்கள் தங்கள்மெய்யதுவெண்
பொடிநீறு
ஏலவுடம்பிடர்தீர்க்கும் இன்பந்தருவதுநீறு
ஆலமதுண்ட மிடற்றெம்மாலவாயான்திரு
நீறே, 9

குண்டிகைக்கையர்களொடுசாக்கியர் கூட்டமும்
கூடக்
கண்டிகைப்பிப்பதுநீறுகருதவினியதுநீறு
எண்டிசைப்பட்டபொருளோரேத்துந்தகையது
நீறு
அண்டத்தவர்பணிந்தேத்துமாலவாயான்திரு
நீறே. 10

ஆற்றல்அடல் விடையேறும் ஆலவாயான்திரு
நீற்றைப்
போற்றிப்புகலிநிலாவும்பூசுரன்ஞானசம்பந்தன்
தேற்றித்தென்னனுடலுற்ற தீப்பிணியாயினதீர
சாற்றியபாடல்கள்பத்தும்வல்லவர்நல்லவர்
தாமே. 11

திருச்சிற்றம்பலம்

வெளியிடுபவர் : ஆணையர், தமிழ்நாடு அரசு இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை. சென்னை-600 034.
ஆசிரியர் : கவிஞர் டாக்டர் த. அமிர்தலிங்கம், எம்.ஏ. பிஎச்.டி.
அச்சிட்டோர் : தமிழரசு அச்சகம். அரசினர் தோட்டம். சென்னை-600002.



மயிலை சித்திரக்குளத் திருப்பணியைத் தொடக்கி வைத்து மாண்புமிகு அறநிலையத் துறை அமைச்சர் டாக்டர் மு. அம்மமூத்துப்பிள்ளை எம்.பி.பி.எஸ். எம்.எஸ். அவர்கள் சிறப்புரையாற்றுகிறார்கள். இந்து சமய அறநிலையத்துறை ஆணையாளர் திருமிகு ச. சாவர்க்கர் இ.ஆ.ப. அவர்களின் முன்னிலையில் நடைபெற்ற இவ்விழாவில் மயிலை சட்டமன்ற உறுப்பினர் திரு வெ. பாலசுப்பிரமணியம், இணை ஆணையாளர் திரு இரா. சுப்பிரமணியன் பி.ஏ.பி.எல். சென்னை துணை ஆணையாளர் திரு. ப. ராஜா. பி.எஸ்சி. பி.எல். ஆகியோர் கலந்து கொண்டு சிறப்பித்தார்கள்.



திருச்செந்தூர் அருள்மிகு செந்திலாண்டவர் ஆலயத்தில் சிறப்புற நடைபெற்ற கந்தர் சஷ்டி விழாவில் மாண்புமிகு அறநிலையத்துறை அமைச்சர் டாக்டர் **மு. அம்மமுத்துப்பிள்ளை,** எம். பி. பி. எஸ்., எம்.எஸ். அவர்கள் கலந்து கொண்டு சிறப்பித்தார்கள். இந்து சமய அறநிலையத்துறை ஆணையாளர் திருமிகு ச. சாவர்க்கர் இ.ஆ.ப. உடன் உள்ளார்கள். இணை ஆணையாளரும் ஆலயநிர்வாக அதிகாரியுமான திரு தி. ஜெயராமன் பி.ஏ. பி.எல். அவர்கள் விழா ஏற்பாடுகளைச் சிறப்புறச் செய்திருந்தார்கள்.

